

உன் அறிவைப் பொறுத்தது உன் சந்தோஷம்
உன் சந்தோஷத்தைப் பொறுத்தது உன் வாழ்வு
உன் வாழ்வைப் பொறுத்தது உன் மதிப்பு
அது உனக்கே பிறர் மதிக்க அல்ல

# ஒரு ஞானியின் வாழ்க்கை

## நெரூர் சதாசிவ பிரும்மேந்திரர்

(சுயசரிதை)








ஞானச்சேரி வெளியீடு,
"கிருஷ்ணபுரி" 30, சீனிவாசா அவன்யூ,
ராஜா அண்ணுமலைபுரம், : : சென்னை—600 028.

விலை : ரூ. 2—00

ஞானச்சேரி வெளியீடு—1

மூன்றும் பதிப்பு மே—1984







# ஞானிகளைச் சந்திக்க...

★ பிரதி செவ்வாய், புதன், வெள்ளிக்கிழமைகளில் ஞான வகுப்பு மாலை 6-30 முதல் 8 மணி வரை.

★ வியாழன் தனி தரிசனம் : காலை 8 முதல் 12 மணி வரை. பொது தரிசனம் : மாலை 4 மணி முதல் இரவு 9 மணி வரை.

★ ஞாயிறு மாலை 6-30 : ஞானிகளின் தெய்வீகச் சொற்பொழிவு.

★ ஞானிகளைச் சந்திக்கும் இடம் : முருடீஸ் லாட்ஜ், லஸ், மயிலாப்பூர், சென்னை-4.

---

அச்சிட்டோர் : சீனிவாசா பவர் பிரஸ், 145 கச்சேரிரோடு, மயிலாப்பூர், சென்னை—600 004.

52-

# பொருளடக்கம்


1. முன்னுரை
2. முகவுரை
3. தோற்றுவாய்
4. தோற்றம்
5. மணமும் மனமும்
6. பைத்தியங்கள்
7. கன்னிவேட்டை
8. தாமரைக்குளம்
9. நாகலட்சுமிக்கு மோட்சம்
10. காஞ்சியில் சதாசிவ பிரும்மம்
11. சமயகுருவும் சமயவாதும்
12. வித்வத் சதஸும் மௌன விரதமும்
13. மௌனமும் கொந்தளிப்பும்
14. பிக்ஷையும் சிக்ஷையும்
15. ராமேஸ்வரத்தில் பிரும்மம்
16. கண்ணன் கட்டளை
17. சித்தர் விளையாடிய சித்து
18. முத்துப்பல்லக்கு
19. சிவப்புக்கல் மூக்குத்தி
20. வைகையில் இறங்கிய சித்திராங்கி
21. ஆகாயப் படுக்கை
22. தலையில் தீ வைத்த திகம்பரன்
23. கங்கை எலியுடன் சதாசிவம்
24. காலித்தேங்காய்
25. ஜீவசமாதி
26. குரு செய்த சாஸனம்
27. காமன் பண்டிகை

# உங்கள் முன்...

தோற்றம் என்றால் மறைவு என்று பொருள். ஊற்று என்றால் நிரந்தரம், அது மறைவதல்ல என்று பொருள்.

கடவுளை உணர்ந்த பிரும்ம ஞானிகளும் கடவுளும் இப்படியே. அதுபோல் பலமுறை தோன்றி பணி செய்த நெரூர் ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரரின் தோற்றப் பொலிவை விளக்கும் ஞானியின் வாழ்க்கை மூன்றாவது பதிப்பை கொண்டுவருவது இறைவனின் அருள்.

இதை வெளிவர உதவி செய்த அத்துணை மெய்யன்பர்களுக்கும் உளங்கனிந்த நன்றி.

இறை அன்பன்,
எஸ். மகாதேவன்.
[நிர்வாகப் பணியாளன்]

மயிலை,
சென்னை-4,

---

**திருத்தம் :**

கேடிலியப்ப பிள்ளை அவர்களின் திருக்குமாரன் தாயுமான அடிகளார். இத்தாயுமானவரே பிரும்மேந்திரரை மௌன குருவாகக் கொண்டவர் என்று படித்துக்கொள்க.

# முன்னுரை

தென் ஆற்காடு ஜில்லாவில், சின்னத்தச்சூர் ஒரு கிராமம். ஆந்திரத்திலிருந்த ஒரு பக்தர் கால் நடையாய், பார்த்தசாரதி பெருமாள் விக்கிரகத்தைத் தன் இடுப்பிலேயே வைத்துக்கொண்டு நடந்தார். கடவுளைக் கீழே வைத்தால் சொந்தம் போய்விடும் என்பது அவர் கருத்து.

பெருமாளை இடுப்பிலேயே வைத்து ஆராதனை செய்த இவர், சின்னத்தச்சூர் குளக் கரையில் பெருமாளைக் குளிப்பாட்ட வேண்டி வைத்தார்.

விக்கிரகத்தின் விசேஷத்தை அறிந்த ஊர் ஜமீந்தார், பக்தன் இருந்தால்தான் பார்த்தசாரதி இருப்பான் என்பதால், பக்தர் கிராமத்தில் தங்க எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார்.

இந்த பக்தனின் வம்சத்தில் வந்த தச்சூர் வெங்கிட்ட ரமணனின் மகன் கிருஷ்ணஸ்வாமிக்கு மகனாய் அவதரித்தார், நம் குருநாதன் நெரூர் சதாசிவ பிரும்மம். பிரும்ம ஞானிகளின் தாயார் ருக்மணி. ஞானிகளுக்குத் தந்தை, குடும்பப் பெயரான "வெங்கிடராமனையும்", கிராமத்தின் அருகில் உள்ள திருச்சிற்றம்பலம் என்ற ஊரின் தெய்வத்தின் பெயரான "நடராஜனையும்" வைத்தார்.

இளமையிலேயே இறைநாட்டம் கொண்ட ஞானிகள் கடவுளின் காட்சி தெரிகிறது எனத் தந்தையிடம் கூறுவார். கடவுளின் அருளையும் சக்தியையும் பெற்றிருந்தார். படிப்பில் கவனம் குறைந்தது. தந்தை கவலை கொண்டு காமகோடி தற்போதைய பெரியவர் குருநாதர் சந்திரசேகரேந்திர சரஸ்வதியிடம் அழைத்துச் சென்றார்.

இருபதாம் நூற்றுண்டில் பிரும்மேந்திரர் நடராஜன் என்ற பெயரில் சங்கராச்சாரியாருடன் ஒன்றரை மாதங்கள் தங்கினுர். அப்போதெல்லாம் நடராஜன், பக்தன் என்றே எங்களுக்கும் ஸ்வாமிகளுக்கும் தெரியும். பிரும் மேந்திரரின் பிரபாவம் அடங்கியே இருந்தது.

காஞ்சி வரதராஜப் பெருமாளின் பரிபூர்ண அநுக்கிர கத்தை அடைந்த ஞானிகளை, உலக வாழ்வுக்குத் திருப்ப எண்ணிய தந்தை வேலைக்கு அனுப்பினுர். சில காலம் அவர் சென்னையிலும், பெங்களூரிலும் வேலை பார்த்தார்.

இறைவனின் கட்டளைக் கிணங்க தந்தைக்குத் தெரியாமல் சென்னைக்கு வந்து மயிலையில் குடும்பத்தைப் பிரிந்து தனித்தே வாழ்ந்தார்.

மகனைப் பாராமல் தந்தை மரணம் அடைய, நடராஜன் முற்பிறப்பின் பூரண நினைவுகொண்டு, நெரூர் சதாசிவப் பிரும்மம் என்ற பிரும்ம ஞானியாக இன்று நம் முன் மயிலையில் பணி செய்கிறுர்.

ஜீவசமாதி அடைந்த ஞானிகள் மீண்டும் வருவ தற்கு ஜீவசமாதி அடைவர். அவ்விதம் நெரூரில் ஜீவ சமாதி அடைந்த பிரும்மேந்திரர் நம்மிடையே மீண்டும் வந்து "ஞானச்சேரி" நடத்துவது பொதுமக்களுக்கு ஒரு சிறந்த வாய்ப்பே.

ஞானிகளுக்குத் தாய்வழி உறவினனுன நான் முன்னுரை எழுதுவது கடவுளின் அருளே. 18-ஆம் நூற்றுண்டில் ஞானிகள் படித்த அடியவனின் ஊரான திருவிசைநல்லூர் பாகவதபுரத்தில்தான் 20-ஆம் நூற்றுண்டில நடராஜன் என்ற பெயருடன் சதாசிவப் பிரும்மம் அவதரித்தார் என்பது எங்களுக்கும், எங்கள் ஊருக்கும் பெருமை.

ஞானி நெரூர் சதாசிவப் பிரும்மேந்திரரின் சுய சரிதைக்குக் கடவுளே முன்னுரை. இந்த எனது முன்னுரை ஒரு சாதாரண வழக்கே.

அன்பன்,
கிருஷ்ண ராவ்
("கலைமகள்.")

# முகவுரை

பதினெட்டாம் நூற்றுண்டில் ஜீவசமாதி அடைந்த பிரும்மஞானி சதாசிவப் பிரும்மம் இருபதாம் நூற்றுண்டில், ஞானி. பதினெட்டில் பரிபக்குவமடைந்து அத்வைதியாகி ஆடையின்றித் திரிந்து, காஞ்சி காமகோடி பீடாதிபதி பரமசிவேந்திர ஆசாரியரை இரண்டாவது குருவாகக் கொண்டதும்... உடனே மௌனத்தை இறைவனே அருளினுன்.

வாழ்ந்த சிறிது காலத்தில்... ''ப்ரூஹி முகுந்தேதி'' ''பிபரே ராமரஸம்'' என்று பாடி இசையில் இறைவனுடன் லயித்து குருவின் ஆணையால் சமாதியாகும் வரை மௌனத்தில் லயித்து ''பேசுங் குழந்தை வாய் தைக்கப் பட்டு பேசாமல் ஆனதற்கே'' ஒக்கும்.

அவள் சமைத்த உணவை அவள் கையால் முதல் நாள் இலையில் இடும் சற்று முன்பே—புதுமணத் தம்பதிகள் நிலையில்—கணவன் மனைவியைச் சுவைக்கும் முன்பே இழந்தான்.

அவன் எப்படி மறு கல்யாணத்தின் மூலம் இல்லறத்தை ஓரளவு திருப்தி செய்து கொண்டு இறந்த மனைவியை எண்ணித் தவிக்கிறுனே அப்படித்தான் ஞானி சதாசிவப் பிரும்மமும் இறைவனும்.

இறைவன் பதினெட்டில் உள்ளவனை இருபதில் அழைத்தான். அவளே இருபதில் அன்று சமைத்ததைப் போல் இன்று சமைத்துப் பரிமாறுகிறுள்.

அன்று ஞானியின் ஊர் நெரூர், வீடு ஜீவசமாதி. இன்று அவனது ஊர் நீங்கள் வாழும் ஊர். அன்று அவன் பணி இறைபணி தன்மை ஞானம்; இன்றும் அதில்

மாறுதலே இல்லை. அன்று அவனுக்குத் துணை பகவான் "புத்தன்".

இன்றும் அவனுக்கு புத்தன் வெளிச்சுவாஸ மென்றால்... ஞானி உட்சுவாஸம். ஞானி வெளிச்சுவாச மென்றால் புத்தன் உட்சுவாஸம்.

தன்மை, முன்னிலை இரண்டும் ஞானியின் தன்மை, இறைவனும் அவனும்—ஒன்று, என்ற அத்வைதமே.

பொது மக்களுக்கு உணர்த்தும் பொழுது, முன்னிலைப் படுத்திக் காட்ட பிரித்துப் பேசி, தனித்துப் பேசி, இரண்டாகக் காட்டும் துவைதம் என்ற நிலையே.

நெரூர் சதாசிவப் பிரும்மேந்திரரின் பதினெட்டாம் நூற்றாண்டின் சொந்த அநுபவத்தை முன்னிலைப்படுத்த—ஒரு ஞானியின் வாழ்க்கை என்ற தலைப்பில்—சொந்த அநுபவமே கதையாக வருகிறது.

தன்மை நிலையில் அவரின் நேர்முக அநுபவம்: "மயிலை" ஞானச்சேரி வகுப்புகள், சொற்பொழிவுகள் இவைகளே.

புத்தனும், ஞானியும் உலா வருகிறார்கள்.

முன்னிலை எழுத்துக்கள் ஒருவனைப் பற்றி, அந்த ஒருவனே எழுதும் பையோகிரபி எனவும்; தன்மை நிலை, அநுபவ விளக்கங்கள் நெரூர் சதாசிவப் பிரும்மேந்திரரின் ஆட்டோபையோகிரபி எனவும் கொள்ளலாம்.



# தோற்றுவாய்

காவிரி பாய்கின்ற புண்ணிய பூமி திருச்சிராப்பள்ளி பிள்ளை பிறக்க கரு ஏற்படுவது போல் அதன் அருகே 'கரூர்' என்ற ஊர். கருவுக்கு இறைவன் முக்கியம் என்பது போல் கருவூருக்கு அருகே நெரூர் என்ற சிறிய கிராமம். இது காவிரிப் படுகையில் உள்ள இடம்.

ஸ்ரீசதாசிவ பிரும்மேந்திரர் என்ற பிரும்ம ஞானிகள் பாரதத்தின் பல பகுதிகளை ஞானியாகவே இருந்து சுற்றி ஞானப் பிரசாரம் செய்து வந்தார்.

ஒரு சமயம் ஒரு முஸ்லிம் தோழரால் தன் கை வெட்டப்பட்டு அது தனித்துக் கிடக்க, அப்படியே நடந்து உணர்வில்லாமல் பிரம்மத்தில் லயித்துக் கொண்டே சஞ்சாரம் செய்தார். கையை வெட்டியவர் ஞானியின் கையை எடுத்துக்கொண்டு அவர் பின்னே சென்று தன் தவறுதலை உணர்த்தி நெஞ்சுருகி நின்றார். பிரும்மேந்திரர் கையை வாங்கி வெட்டுண்ட பகுதியோடு இணைக்க, இறைவன் அருளால் கை இணைந்து ஒன்றியது. முஸ்லிம் சீமானும் ஞானியின் அருளைப் பெற்றார். பிரும்மேந்திரரின் சம காலத்தில் வாழ்ந்தவர் தாயுமான அடிகளார். பிரும்மேந்திரர் சமாதியாவதற்கு முன் பல காலம் மௌனியாகவும், ஆடையே இல்லாத அவதூத ஞானியாகவும் திரிந்தார். மௌனமாக இருந்த சதாசிவ பிரும்மேந்திரரை அடிகளார் தன்னுடைய மௌன குருவாகக் கொண்டார் என்பது வழக்கு.

தாயுமானவர் 'மௌன குரு வணக்கம்' என்ற பாடலில் இதைக் குறிப்பதாகச் சொல்வர். பிரும்மேந்திரர் புதுக்கோட்டை மன்னனுக்கு உபதேசம் செய்து மன்னனைத் தன் சீடனாகக் கொண்டார்.

கடைசியில், ஞானியான இவர் நெரூரில் காவிரிப் படுகையில் பலபேர் முன்னிலையில் சமாதியில் இறங்கி உடம்புடன் மறைந்தார். இதற்கு ஜீவ சமாதி என்று பெயர்.

ஜீவசமாதி அடைந்த இம்மஹானின் போன ஜன்ம வரலாற்றை ஆராய்வோம். வரலாற்றைத் தொகுப்ப தற்கு முன் சில உண்மைக் குறிப்புகளைப் பார்க்கலாம்.

இவரது ஜீவசமாதி விளங்குமிடம் கரூருக்கு அருகிலுள்ள நெரூர். பிரும்மா விஷ்ணு ருத்ரன்...... அதாவது பிரும்மா, திருமால், சிவன் இந்த மூன்று தெய்வங்களும் ஒன்ருகச் சேர்ந்துள்ள உருவம் திருமூர்த்தி அல்லது தத்தாத்ரேயர் என்பார்கள். இக் கடவுளின் அம்சமே சதாசிவ பிரும்மேந்திரர். இச்சை, கிரியை, ஞானம் இந்த மூன்று சக்திகளை உடையவர் இவர். ஸ்ரீசதாசிவ பிரும் மேந்திராளின் சித்த.லீலா விநோதங்களைப்பற்றி வழிவழி கர்ணபரம்பரைக் கதைகள் அவர் வாழ்ந்த இடங்களில் இன்னும் இருந்து கொண்டே இருக்கின்றன.

இவர் ஒரு சித்தர், இவர் ஒரு ஞானி. இப்படிப் பிணைந்து பிணைந்து வாழ்ந்து வந்தவர் பிரும்மேந்திரர். மைசூர் மாநிலத்தில் உள்ள ஸ்ரீசிருங்கேரி சாரதா பீடம் மடாலயம் ஆதிசங்கரரால் நிறுவப்பெற்றது. அதில் குருவாக இருந்த ஸ்ரீ நரசிம்ம பாரதி ஸ்வாமிகள் ஆசாரிய ராக இருந்தார். நெரூர் சமாதிக்கு வந்து பிரும்மேந்திர ரைப் பற்றி அவர்கள் ஒரு துதி செய்திருக்கிருர்கள்.

ஒவ்வொரு வருடமும் பிரும்மேந்திரருக்கு வைகாசி மாதத்தில், சுத்த தசமி திதியில், அங்கும்—எங்கும். ஆராதனை விழாக்கள் நடைபெறுகின்றன.

பேயராகவும், சித்தராகவும், மௌனியாகவும் திரிந்த பிரும்மஞானிகளின் வரிசையில் இவரும் ஒருவர்.

கிறிஸ்துவ சகாப்தம் பதினெட்டாம் நூற்ருண்டில் தமிழ் நாட்டில் பல பெரியவர்கள் அவதரித் தார்கள்

அவர்களில் ஒருவர் சதாசிவேந்திரர் என்னும் ஆன்ம ஞானி. நிர்வாணமாகத் திரிந்து பிரம்மத்தில் வயித்தவர்.

திருவிசைநல்லூரில் வாழ்ந்த "அய்யாவாள்" என்னும் ஸ்ரீதர வெங்கடேசர் பக்தி முறையில் நாமசங்கீர்த்தன முறைக்கு முதன் முதலில் மிகப் பெரிய நூல் எழுதியவர்.

ஞான—சித்துடன் விளங்கிய அய்யாவாள், துறவி போதேந்திரராக விளங்கி, ஆடுதுறைக்குப் பக்கத்திலுள்ள கோவிந்தபுரத்தில் சமாதி அடைந்துள்ளார்.

இவர் சதாசிவ பிரும்மேந்திரருடன் படித்தவர்; கூடவே திரிந்தவர்; ஞானியும் ஆனவர். இவ்விருவரின் வாழ்க்கை அக்காலத்திலும் பின்னிப் பிணைந்தது.

சிவயோகி தாயுமானவ சுவாமிகள் இவர் காலத்தில் வாழ்ந்தவரே. திருவையாற்றில் வாழ்ந்த தியாகப் பிரும்மமும் கிட்டத்தட்ட இவர் காலத்தவரே என்று நூல்கள் சொல்லுகின்றன. மேற்கண்ட குறிப்புகளையும், புதுக் கோட்டை கனகராஜ ஐயர் எழுதிய 'முனிவர் சரிதம்' என்னும் குறிப்பிலிருந்தும் இவரைப்பற்றி அறிய முடிகிறது.

சதாசிவர் சமாதியுள்ள நெரூர், அய்யாவாள் வசித்த திருவிசைநல்லூர், திருமாநிலையூர், கரூர், மதுரை முதலிய இடங்களில் வழங்கும் கர்ணபரம்பரைக் கதைகளும், பிரும்மேந்திராளைப் பற்றி நன்ருகத் தெரிந்துகொள்ள உதவுகின்றன.



# 2

# தோற்றம்

**சோ**மசுந்தரக் கடவுள் கோயில் கொண்டருளிய மதுரையம்பதியின் விசேஷங்கள் பல. தமிழ்ச் சங்கம் தழைத்தோங்கிய பதி மதுரையே. அப் பகுதியில் வைதீக ஆந்திர அந்தணர் குடும்பத்தில் தோன்றியவரே ஸ்ரீ நெரூர் சதாசிவ பிரும்மேந்திரர்.

சோமநாத அவதானியருக்கும் பார்வதி அம்மையாருக்கும் தவத்தின் பயனாக சதாசிவேந்திரர் அவதாரம் செய்தார். கி. பி. 1738ஆம் வருஷம் அவதூதராய், பக்குவமடைந்து ஆத்ம ஞானியாய் புதுக்கோட்டைக் காட்டுப் பகுதிகளில் திரிந்த சமயம், விஜயரகுநாத தொண்டைமான் என்ற அரசருக்கு உபதேசம் செய்ததாகச் சரித்திரக் குறிப்புகள் கூறுகின்றன. இவர் படிப்பை முடித்துத் துறவை ஏற்று, பக்குவமடைந்து விளங்கிய காலத்தில் 30 வயதிற்கு மேற்பட்டவராகக் கொள்ளுதலே தகும். 18 ஆம் நூற்றாண்டின் முதல் பத்தாண்டுகளுக்குள் அவதாரம் செய்தவர். பிரும்மேந்திரரின் குருநாதர் பரமசிவேந்திர சுவாமிகள் என்பவர் காஞ்சி காமகோடி பீடத்தின் ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகளாவார் என்றும், அவர் 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும், அதே 16ஆம் நூற்றாண்டில்தான் சதாசிவ பிரும்மேந்திராளும் வாழ்ந்தவர் என்றும், பரமசிவேந்திர சுவாமிகளிடம் உபதேசம் பெற்று 200 ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்தார் என்றும், காஞ்சி மடாலயக் குறிப்புகள் மாத்திரம் கூறுகின்றன. பல யோக சித்துக்களை உடைய பிரும்மேந்திரர் அப்படியும் வாழ்ந்திருக்கலாம்.

ஆனல் புதுக்கோட்டை அரச சபைக் குறிப்புகள் இவர் 18 ஆம் நூற்ருண்டுப் பெரியாரே என்று கூறுவ தால் அதையே நம்பலாம்.

சதாசிவ பிரும்மேந்திராளின் இயற்பெயர் சிவராம கிருஷ்ணன். சிறு வயதிலேயே மதுரையில் இவர் படிப்பை முடித்தார். திருவிசைநல்லூரில் ராமசுப்பா சாஸ்திரிகள் என்பவரிடம் வேதாந்த பாடம் அறிந்தார்.

இவரும், இவரின் நண்பரான அய்யாவாள் என்ற சிறப்புப் பெயருடன் விளங்கிய ஸ்ரீதர வெங்கடேசரும் பிக்ஷாண்டார் கோயில் மகாபாஷ்யம் கோபாலகிருஷ்ண சாஸ்திரிகளிடம் சிறப்புப் பாடம் கேட்டவர்கள்.

ஸ்ரீதர வேங்கடேச அய்யாவாள் என்ற சாஸ்திரப் புலி மைசூர் ராஜ்யத்தில் ராஜயாதிகாரம் வகித்தவர். அந்த இடத்தைவிட்டு தஞ்சை ஜில்லா, திருவிசைநல்லூர் வந்து சிவராம கிருஷ்ணனென்னும் சதாசிவ பிரும்மேந்தி ராளுடன் நெருங்கிப் பழகி நகமும் சதையும்போல் ஆன்ம நண்பராகி விட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. அய்யா வாளின் மூதாதையர்களும், பிரும்மேந்திராளின் மூதாதை யர்களும் மகாராஷ்டிரப் பகுதியைச் சேர்ந்தவர்கள்.

மகாராஷ்டிரத்தை ஆண்டு வந்த சஹாஜி போஜன் என்ற மன்னன் தென்னுட்டில் தஞ்சையைத் தன் ஆளுகைக் குள் வைத்திருந்தான். மகாராஷ்டிர மன்னனின் பிரதிநிதி தான் குருநில மன்னனுகத் தஞ்சையை ஆண்டு வந்தான். அவனில் ஒருவனே சரபோஜி மன்னன். சஹாஜி போஜனே சரபோஜி என்ருயிற்று. மகாராஷ்டிர மன்னன் மகாராஷ் டிரத்திலிருந்தும், ஆந்திரத்திலிருந்தும் ஐநூறு புலவர் குடும்பங்களை சமய சாஸ்திர ஆராய்ச்சிக்காக தஞ்சை யிலுள்ள திருவிசைநல்லூரில் குடியேற்றினுன். அங்கு வடமொழி கலாசாலையையும் கட்டினுன்.

கடைசியில் சரபோஜி வைத்த குடும்பங்களில் மிஞ் சியது இரண்டு குடும்பங்களே. அதில் ஒன்று சகஸ்ரா

வதானி குடும்பம். அதில் தோன்றியவரே சதாசிவ பிரும்மம் என்ற பிரும்மஞானி. மற்ருென்று மகாராஷ்டிரக் குடும்பம். அதில் தோன்றியவரே ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள்—இவரே துறவி போதேந்திரராவார்.

ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரர் படித்து முடித்து விட்டு வீடு திரும்பினுர். இவர் பால்ய விவாகம் செய்து கொண்டவர். மனைவி பூப்பு எய்தினுள் என்ற செய்தி கேட்டு வீடு திரும்பிய பிரும்மேந்திரர் அந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்ளும் முன்பே இறைவனுல் ஆட்கொள்ளப்பட்டு துறவு பூண்டார்.

ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் என்பவர் மண வாழ்க்கை நடத்தி சாத்திர விற்பன்னராக விளங்கியவர். அந்தக் காலத்து காஞ்சி காமகோடி பீடத்து மகாநாடு களுக்கு தலைமை வகித்தவர்.

பேயராய் துறவு பூண்டு திரிந்த சதாசிவ பிரும்மேந்திராளின் வாய்மொழிகளை, அவ்வப்போது ஓலைச்சுவடிகளில் எழுதிவைத்தவர் திருவிசைநல்லூர் ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் அவர்களே.

பிற்காலத்தில் ஐயாவாள் துறவு பூண்டார். இவருக்கு போதேந்திர சுவாமிகள் என்ற பெயரைச் சூட்டியவர் ஸ்ரீசதாசிவ பிரும்மேந்திரரே. இதனுல் ஐயாவாளின் காலத்தை வைத்து பிரும்மேத்திரரை நன்ருக அறிய முடிகிறது. திருவாவடுதுறைக்கு அருகிலுள்ள கோவிந்தபுரம் என்ற கிராமத்தில் தான் ஐயாவாள் சமாதியடைந்தார். இன்றும் கதாகாலட்சேபம் செய்பவர்கள், இவரின் சமாதிக்கு முதலில் சென்று அரங்கேற்றி விட்டுத்தான் பின் அதைத் தொடர்வார்கள்; பிரசித்தியும் அடைவார்கள். காரணம், ஐயாவாள் தான் அந்தக் கலைக்கே உயிர் ஊட்டியவர். ஐயாவாள் திருவிசை நல்லூரில் வாழ்ந்து வந்த காலத்தில் வழக்கம்போல் காவிரிக்கரைக்கு குளிக்கச் சென்ருர். அங்கே வேறு ஜாதியைச் சேர்ந்த ஒருவரின் உடல் பிணமாகக் கிடந்தது. அந்த சடலத்திற்கு இவரே

கர்த்தாவாக மனத்தில் எண்ணிக்கொண்டு அதை இடு காட்டில் இட்டுக் கிரிகைகளை முடித்து திரும்பினார். (ஞானியாகிய இவர் ஜாதி, மதத்தை வெறுத்து வந்தார் என்பது இவரின் செய்கையிலிருந்து தெரிய வருகிறது.)

அந்தக் காலத்து பிராமணர்கள் "ஐயாவாளை" ஜாதியை விட்டு ஒதுக்கி விட்டனர். நடந்து சென்று கங்கையில் நீராடி வந்தால் ஊருக்குத் திரும்பிவரலாம் என்றனர். ஐயாவாள் அவர்களால் குறித்த காலத்திற்குள் ஊர் திரும்ப முடியாதென்றே ஊரார் இப்படிச் சட்டம் விதித்தனர். மனம் வெதும்பிய ஐயாவாளுக்கு சிவபெருமான் அருள் புரிந்தார். அவர் வீட்டிலேயே "கங்கை" பொங்கியது. அதில் ஐயாவாள் நீராடினார். இதையும் சிவபெருமானையும் திருவிசைநல்லூர் மக்கள் பார்த்தனர் என்பது வரலாறு.

ஜாதி மத பேதத்தை வெறுத்த ஐயாவாளை பிரும்மேந்திரர் நேசித்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

# 3

# மணமும், மனமும்

**பா**ல்யத் திருமணம் செய்து கொண்ட சதாசிவப் பிரும்மேந்திரரின் மனைவியின் பெயர் நாகலட்சுமி.

மனைவி பூப்பு எய்தினாள் என்ற செய்தி கேட்டு, அத் திருவிழாவில் கலந்து கொள்ள, பிரும்மேந்திரர் திருவிசைநல்லூர் கலாசாலையிலிருந்து மதுரைக்கு வீடு திரும்புகிறார்.

வீட்டிலே, கோலாகலமாக, விழா நடக்கிறது. மனைவி நாகலட்சுமி, மஞ்சள் நீர் ஆடி மணையிலே அமர்ந்திருக்கிறாள். பிரும்மேந்திரரின் உறவினர்கள் வீட்டில் கூடியிருந்தனர்.

பூப்பு எய்திய ஆரும் நாளில் பிரும்மேந்திரராகத் திகழப்போகிற சிவராமகிருஷ்ணனுக்கு "சாந்தி முகூர்த்த" நாள் குறிப்பிட்டு இருந்தனர். அந்த வைபவத்திற்கு சிவராம கிருஷ்ணனை, குதூகலிக்க வைத்து கிண்டல் செய்யவும். சில நண்பர்கள் இவருடன் வந்திருந்தனர்.

அதில் முக்கியமானவர், திருவிசைநல்லூர் ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள்.

சாந்தி முகூர்த்த நாளான அன்று, இரவு விசேஷத்திற்காக இவருடைய வீடே அலங்கரிக்கப்பட்டு இருந்தது.

அன்று, காலை பூஜைகளெல்லாம் முடிந்து, பகல் உணவு உறவினர்களுடன் சேர்ந்துச் சாப்பிட, வெகு நேரமாயிற்று.

சிவராமகிருஷ்ணனுக்குப் பசி பொறுக்க முடியவில்லை. கடவுளுக்கு படைப்பதற்காக, ஒரு பெரிய பாத்திரத்தில் நிறைய ஜிலேபிகளும், வேறு ஒரு பாத்திரத்தில் எள்ளை இடித்து, வெல்லத்தையும் கலந்து வைத்திருந்தனர்.

அதை, பிரும்மேந்திரர் எடுத்துப் புசித்து விட்டார். தாய் அதைக் கடவுளுக்குப் படைக்க வரும்பொழுது, நாகலட்சுமி அதைத்தடுத்து பிரும்மேந்திரரின் செய்கையை மாமியாரிடம் சொல்லிக் கொடுத்து விட்டார். இதனால், ஆசாரமும், பூசையும் கெட்டு விட்டதாகத் தாய், மகன் சிவராமகிருஷ்ணனை கடிந்துகொள்கிறார்.

இந்தச் சிறு சம்பவத்தால், சிவராமகிருஷ்ணன் வெகுண்டெழுந்து சாப்பிடாமலேயே, எவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வீட்டைவிட்டு வெளியேறுகிறார்.

பெரிய மனிதர்களுக்கு, வாழ்க்கையில், ஒரு சிறிய சம்பவமே ஒரு பெரிய திருப்பத்தை ஏற்படுத்தி விடும். எவ்வளவு பெரிய சம்பவங்களும் சாதாரண மனிதர்களுக்கு மனமாற்றத்தை ஏற்படுத்தவே செய்யாது. இது தான், ஞான-அஞ்ஞான லட்சணம்.

''பெரிய பயில்வானாக இருந்தாலும் எள்ளிலிருந்து அவனால் எண்ணெய்யைப் பிழிந்து எடுக்க முடியாது. இறைவன் என்ற செக்கில், நம் எண்ணத்தை வைத்து, அவனைச் சுற்றுவதாக-நாம் இவ்வுலகையே சுற்றி வந்தால் எதிலிருந்தும் எதையும் பெறலாம்.

''ஆகையால், இனி நான் மனைவியைச் சுற்ற மாட்டேன்; ஞானியாக உலகையே சுற்றுவேன்.

வாழ்க்கைக்குத் துணையென்று நாகலட்சுமியை எண்ணினேன். நான் செய்த சிறிய தவற்றுக்கு அவள் ஆரம்பத்திலேயே துணையாக இல்லை. இனி நான் அவளுக்கோ, அவள் எனக்கோ எதற்கும் ஞானத்துக்கும் துணையாக மாட்டோம். இறைவனே எனக்குத் துணை, நானே அவனுக்குத் துணை'' என்று எண்ணியபடி பிரும்மேந்திரர் சஞ்சாரியானார்.

மதுரையில் வீட்டில் பரபரப்பு; உறவினர்கள் பிரும்மேந்திரரைத் தேடுகின்றனர்.

அத்யந்த நண்பரான ஐயாவாள் நண்பனைக் காணமல் அதிர்ச்சியுற்று மதுரையிலிருந்து பிரும்மேந்திரரைத் தேடிப் புறப்படுகிறார்.

வீட்டை விட்டு மகன் மருதவாணன் காணமல் போனவுடன், அவனைத் தேடிக்கொண்டு திருவெண்காடர் திருவிடைமருதூர் கோவிலுக்குள் சென்று, அங்கு மூலஸ்தானத்தில் மகன் மறைவதைக் கண்டு, உலகம் புகழும் பட்டினத்தாராக மாறினார்.

அப்படியே, மதுரையிலிருந்து கோபித்துக்கொண்டு புறப்பட்ட சிவராமகிருஷ்ணன் மானாமதுரைக்கு வந்து ரு மரத்தடியில் ஒரு ஜைன குருவைக் கண்டு, சதாசிவப் பிரும்மம் என்ற ஆடையில்லா அவதூத பிரம்மஞ்ஞானியானார்.

இறைவனின் அருள் இப்படியொரு நிகழ்ச்சியை நிகழ்த்திக் கொண்டிருக்க, சாந்தி முகூர்த்த அறையில் பூச்சரங்கள் மட்டும் சிரித்துக்கொண்டிருந்தன.

கன்னி கழிந்த நாகலட்சுமி, கயிற்றுக் கட்டிலில், தரையைக் குனிந்து நோக்கிக் கொண்டிருந்தாள். கணவன் வீட்டைவிட்டு ஓடிய நிலையில், நாணத்தில், அவள் தலை கவிழவில்லை. பூமி தேவி என்ற கடவுளின் பொறு மையைக்காட்டிலும், நாகலட்சுமி என்ற சிறுபெண்ணின் பொறுமை இன்னும் பதின்மடங்கு ஞானியைப் போன்று வளர வேண்டுமா என்று கேட்கத்தான் தலை குனிந்திருந் தது.

'முதல் இரவை முடிக்காமலேயே, முதல் இரவு முடிந்த தாக எண்ணிக்கொள்' என்று எண்ணுகின்ற, ஞானம் சதாசிவப் பிரும்மேந்திரருக்கு மிகப்பெரிய ஞானமாக இருக்கலாம்.

முதல் முறையாகக் கணவனை அனுபவிக்கப் போகி றோம் என்று எண்ணிக்கொண்டு அவனைக் கண்ணாலும் பார்க்காமல், பிரம்மத்துடன் ஞானிகள் ஐக்கியப்பட்டு, பிரும்ம சுகத்தை உடல் சேர்க்கை இல்லாமல் அநுபவித் தோம் என்று சொல்லக்கூடிய நிலையில பிரும்மேந்திரரின் மனைவியாக இருந்தாலும், நாகலட்சுமியால் அப்படி ஞானம் பேச முடியவில்லை.

ஊர் அறிய, கணவன் ஓடிவிட்டதால், சாந்தி முகூர்த் தம் நின்றுவிட்டது என்ற அதிர்ச்சி, நம்மைக் காட்டிலும் அந்த நிலையிலுள்ள பெண்களுக்கு மலை போன்றது. அன் றிலிருந்து நாகலட்சுமியின் கதை சோகக்கதையே. பல நாட்கள், பல மாதங்கள், சில வருஷங்கள் ஓடின.

பிரும்மேந்திரரின் தாய், தந்தையர்கள் மகனைக் காணாமல் வருந்தினர். உறவினர்கள் இவர்களை ஏசினர். சிறிது காலத்தில் இருவரும் புத்திர சோகத்தால் மாண்ட னர்.

மகள் நாகலட்சுமியின் நிலே கண்டு அவளின் தாய், தந்தையர்களும, அவளேத் தேற்ற முடியாமல் மகளே சோகத்தில் தனியே விட்டு விட்டு மாண்டனர்.

மதுரையில் நாகலட்சுமி தனிமையானுள். கணவனேயே நினைத்துக்கொண்டு, வீட்டையே சுற்றிச் சுற்றி வந்தாள்.

பிரும்மேந்திரர் தன்னுடன் குடித்தனம் நடத்துவதாக எண்ணி, தன் வீட்டிலுள்ள ஒவ்வொரு பொருளுடனும், அவருடன் பேசுவதாக எண்ணி எண்ணிப் பேசினுள்.

பலர் நர்கலட்சுமியை தேற்றுவதுபோல் வந்து அவளே ஏமாற்றி, வீட்டிலுள்ள பொருளேயெல்லாம் கொள்ளே கொண்டு போயினர்.

நாகலட்சுமி சிரித்துச் சிரித்துச் சிறிய சொப்புகளே வைத்து சமைத்துக் கணவனுக்கு கற்பனேயில் பரிமாறினுள். கடைசியில் முழுப்பைத்தியமாகி ஊரை விட்டு ஓடி விராலிமலே வந்து சேருகிருள்.

# 4

# பைத்தியங்கள்

பிரும்மேந்திரர்... ''கேலதி...பிண்டாண்டே...'' என்ற இறைவனின் விளேயாட்டை தத்துவமாக்கிப் பாட, மனேவி நாகலட்சுமி, எங்கோ இருந்துகொண்டு சிறுசிறு நிகழ்ச்சிகளே விளேயாட்டாக மகிழ்ந்து கவலேயில்லாமல் ஊரை எல்லாம் சுற்றுகிருள்.

திரியும் பிரும்மஞானியான சதாசிவம் ''ஆனந்த... பூர்ண.. போதோகம்'' என்ற தத்துவப் பாடலே அடிக்கடிப் பாடுவார் இதனுல் ஞானிகள் அன்ன ஆகாரம் இல்லாமலேயே பல நாள் இருப்பார்.

இந்தச் சமயத்தில் காட்டில் ஞானிகள் மனைவியை நினைத்துக்கொள்வார். அதன் பலனாக நாகலட்சுமி, பல நாள் சாப்பாட்டை மறப்பாள். சிரித்துக் கொண்டே பைத்தியமாகத் திரிவாள்.

இப்படி தூரத்தில் இருந்தே சித்து விளையாடி ஞானியான சதாசிவம் மனைவியை கவனித்துக்கொண்டார் என்பது குறிப்பிடத்தக்கது. விராலிமலை முருகன் கோவில், ஊர், காடு என்று இப்படியாக நாகலட்சுமி பைத்தியமாகத் திரிகிறாள்.

பலர் அவளைத் துன்புறுத்துகிறார்கள். பார்த்துக் கொண்டிருந்த கோயில் குருக்கள் நாகலட்சுமியைப் பார்த்து பரிதாபப் படுகிறார்.

அவர், பிரும்மஞ்ஞானியான சதாசிவத்தைப் பற்றி நன்கு அறிந்திருந்தவர்.

ஞானிகளை குருவாக மனத்திலே எண்ணி, முருகன் சந்நிதானத்தில் நாகலட்சுமியை அழைத்து நிற்க வைக்கிறார்.

அன்ன ஆகாரமில்லாமல் ஊட்டமாக இருக்கின்ற சிறிய பெண் பைத்தியத்திலிருந்து உடனே குணமடைய வேண்டும்.

சத்தியமாக, நிகழ வேண்டும் என்று பிரார்த்திக்கிறார்.

அழகான இவளைக் கைவிட்ட கணவன், பைத்தியம் தெளிந்தால் அழைத்துச் சென்று விடுவான். தெளிந்து விட்டால் இவளே அவனை நாடிவிடுவாள். அதனால் குருநாதா! குணமடையச் செய், என்று வேண்டி நிற்கிறார்.

என்ன ஆச்சரியம்! சதாசிவம் என்ற ஞான சித்தன், விராலிமலை முருக சித்தன் வழியாகப் பைத்தியத்திற்கு மருந்தாகின்றார்.

குருக்கள் கண்ணீர் வடிக்க, நாகலட்சுமி ஒரு நொடியில் தெளிந்து, முருகனை வணங்குகிறாள்.

சதாசிவ பிரும்மமான சிவராமகிருஷ்ணன் என்பவருக்கு வீட்டில் ஒரு செல்லப் பெயர் வைத்திருந்தார்கள். அது பிச்சி குப்பன் என்பதே. தெலுங்கு மொழியிலே பிச்சி குப்பன் என்றால் பைத்தியக்காரன் என்று பொருள்.

விராலி மலைக் கோவிலில் குருக்கள் வேண்ட மனைவி நாகலட்சுமி பைத்தியம் தெளிகிறாள். அந்த சந்தர்ப்பத்தில் மதுரையில் வீட்டை விட்டு ஓடிய சிவராமகிருஷ்ணன் பல ஊர்களைச் சுற்றிக்கொண்டு அழுதுகொண்டே மானாமதுரை வந்து சேருகிறார்.

சிவராமகிருஷ்ணன் ஞானி சதாசிவ பிரும்மமாக விளங்க வேண்டிய காலம் நெருங்குகிறது. இறைவன் அருள் கூட்டுகிறார்.

யதேச்சையாக சிவராமகிருஷ்ணன் ஒரு மரத்தடியில் ஆடையில்லாத ஒரு ஜைன முனிவரைப் பார்த்து அணுகுகிறார்.

திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் மாணிக்கவாசகர் சிவபெருமானை குருவாகப் பார்த்ததைப்போல, ஜைன முனிவரும் சிவராமகிருஷ்ணனும் பசுமாடு தன் கன்றை ஈர்த்தது போல, ஒருவரை ஒருவர் இறைவனருளால் விரும்புகின்றனர்.

கவலையுற்றவனுக்கு மருந்து போல ஜைன குரு சிவராமகிருஷ்ணனுக்கு ஜைன மத மந்திரத்தை காதில் உபதேசிக்கிறார்.

சிவபெருமான் இடையிலே புகுந்து விளையாட ஜைன மந்திரம் சிவ மந்திரமாக சீடனின் காதுகளில் மாறுகிறது.

சிவன் தானாக சிவராமகிருஷ்ணனின் உள்ளே புகுந்ததால் அவர் உடனே பூரண பிரம்ம ஞானியாகிறார்.

இதை ஞானத்தால் உணர்ந்த ஜைன குரு, சீடனை மதம் மாற்ற விரும்பவில்லை.

பெரிய மனது செய்து குரு, சீடனை சதாசிவம் என்று பெயரிட்டு அழைக்க, சீடனும் குருவுக்கு மரியாதை செய்து பிரும்மமே என்று அழைத்து வணங்குகிறார்.

இதனால் சீடன்—குரு இவர்களின் இரண்டு பெயரும் ஒன்றாகி சிவராமகிருஷ்ணனுக்கு சதாசிவ பிரும்மம் என்ற பெயர் விளங்குகிறது.

இதே சந்தர்ப்பத்தில்தான் விராலி மலையில் நாகலட்சு மிக்கு குணம் காண்கிறது.

மானாமதுரையில் இருந்துகொண்டே சதாசிவ பிரும் மம் மனைவியின் வேதனையை வாங்கிக் கொள்வதால் இவர் உன்மத்தராகவும் வாழுகிறார்.

ஞானிகள் உன்மத்தராகவும் மாறியதனால்தான் குருவை விட்டு அடிக்கடி பிரிய நேர்ந்தது.

இவரின் ஆதி முதல் குரு ஜைனரே. ஜைனத் துறவிகள்தான் ஆடையில்லாது விளங்குவார்கள். சதா சிவரும் ஒரு அவதூதர் என்பது குறிப்பிடத்தக்கது.

விராலி மலை குருக்கள், பைத்தியம் தெளிந்த நாகலட் சுமியை வீட்டுக்கு அழைத்துச் செல்லுகிறார்.

குருக்களுக்கும் அவரின் மனைவிக்கும் நாகலட்சுமி யால் கலகம் மூளுகிறது. மனைவி இவளை சஹகளத்தி என்ற சக்களத்தியாகவே நினைக்கிறாள்.

நல்ல நிலையில் உள்ள நாகலட்சுமிக்கு கணவன் சதா சிவ பிரும்மத்தின் நினைப்பும், குருக்கள் வீட்டு உள்நாட் டுக் குழப்பமும் சேர்ந்து வாட்டுகிறது. அன்று இரவோடு இரவாக முருகன் கோவிலுக்கே ஓடுகிறாள். பல நாள் அந்த ஊரிலேயே திரிகிறாள்.

———

# 5

# கன்னி வேட்டை

அழகான கன்னிப் பெண்ணின் வேட்டைக்குக் காத்திருக்கும் ஊர் மைனர்கள் நாகலட்சுமி மீது கண் வைக்கின்றனர்.

இவள் அநாதை என்றும் தெரிந்து விடுகிறது. கணவனை விட்டுப் பிரிந்தவள் என்றும், சாந்தி முகூர்த்தம் தடைப்பட்டதால் பிரமை பிடித்து இவள் விராலி மலை ஓடி வந்தாள் என்றும் தெரியவருகிறது.

பைத்தியம் தெளிந்த நாகலட்சுமியின் கணவன் பிரும்ம ஞானியாகி துறவு பூண்டதால், சந்நியாசி மனைவியை அடைய முடியாது என்பதும் ஊர் முரடர்களுக்குத் தெரிந்து விடுகிறது.

ஓர் ஐந்து பேர் இதையே வாய்ப்பாக எண்ணி இவளை சுவைக்க எண்ணுகின்றனர்; நாகலட்சுமியை தாசியாக்கவும் திட்டமிடுகின்றனர்.

ஒரு நாள் இரவு பிரும்மேந்திரரின் மனைவி முருகன் கோவிலில் உறங்குகிறாள்.

பருந்துகள் கோழிக்குஞ்சை கவ்விக் கொண்டு எங்கோ செல்கின்றன.

ஜைன குருவிடம் மந்திர உபதேசம் வாங்கிய அந்தக் கணமே, திருவிசைநல்லூர் பாடசாலை மாணவனை

சிவராமகிருஷ்ணன், மாறு மதுரையில் திடீரென்று சதாசிவ பிரும்மம் என்ற பிரும்ம ஞானியாகத் திகழலானார்.

விராலி மலை முருகன் அருளால் சதாசிவ பிரும்மம் உபதேசம் வாங்கிய பல மாதங்களுக்குப் பிறகு உன்மத்தர் என்ற ஞானப் பைத்தியமாகவும் திரியலானார்.

இப்படிப்பட்ட அதே அருள் நிலையில் மனைவி நாகலட்சுமி பைத்தியம் தெளிந்தவள் என்று ஆனாலும் சில முரடர்களின் வசம் காமப்பசிக்கு பொருளாகவும் க்கினாள்.

ஞானியாத் திரிந்து கொண்டிருந்த பிரும்மேந்திரரின் மூன்றாவது ஞானக்கண் திடீரென்று திறந்தது.

தவறு இழைத்த பாண்டியன் நெடுஞ்செழியன், பத்தினித் தெய்வம் கண்ணகியின் முன் மதுரையில் உயிர் இழக்கிறான். மாமதுரை, பத்தினியின் சாபத்திலே சாம்பலாகிறது. பத்தினிக் கடவுளாம் அந்த சக்தியின் வடிவமே பத்தினி என்றான். செந்தமிழ் "விரலி" கண்ணகி பாண்டி நாட்டை விட்டுப் புறப்படுகிறாள்.

சோழ மண்டலத்தின் வழியாகக் கண்ணகி சேர நாடு சென்று வானுலகம் செல்லத் திட்டமிட்டாள்.

கேரள தேசத்தின் சில பகுதிகளில் கண்ணகி பகவதி என்ற தெய்வமாகிறாள்.

இந்த செந்தமிழ் விரலி வழி நடையாக வரும்பொழுது இடையிலே ஒரு சிறு குன்றின் மீது முருகனை வழிபட்டுச் சிறிது நாள் அந்த மலையிலேயே தியான நிலையில் அமருகிறாள்.

கண்ணகி தியான சமாதியில் அமர்ந்த அந்த முருகனின் குன்றுதான் அவளுக்குப் பிறகு அவளின் நினைவாக விராலி மலை என்று பெயர் எடுக்கிறது.

விரலி மலை என்பதே விராலி மலை என்று ஆகி அருண கிரிநாதரால் பாடல் பெற்றத் தலமாக மாறுகிறது.

உன்மத்தராகத் திரிந்த சதாசிவ பிரும்மம், தன்மனைவி விராலி மலையில் காமப் பேய்களின் மத்தியிலே அகப்பட்டுக் கொண்டதை உணருகிறுர்.

செந்தமிழ்த் தெய்வம் விரலி கண்ணகி தங்கிய மலை யில் என் மனைவி நாகலட்சுமி பத்தினித் தன்மையை இழந்தால் விராலி மலை முருகனின் ஞானமும் சிறக்குமா? என்று ஒரு நொடியிலே கண்ணகியையும், முருகனையும் எண்ணிஞர்.

நாகலட்சுமியைக் கட்டிலில் கிடத்தி விட்டு சூழ்ந்து நின்ற ஐந்து முரடர்களும் திடீரென்று புஸ் —புஸ்... என்று பெருமூச்சு விட்டுக் கீழே விழுந்தனர்.

அவர்களின் உடல் கண்ணகியால் அனல் பற்றி எரிந்த மதுரையைப் போன்று கொதித்து ஜுரம் கண்டனர்.

"எவருக்கோ சொந்தமான ஒரு பொருள், அது யாரு டையது என்று தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், அது நமக்கு மத்தியிலே இருக்கும்பொழுது அதற்கு பாதுகாப் பாக இருப்பவனே இறைவனின் கண்களுக்கு மனிதன்."

இது சதாசிவ பிரும்மம், என்ற பிரும்மஞானி உதிர்த்த பொன்மொழி.

அவருக்கே உரிய நாகலட்சுமி, விராலி மலையில் காம மிருகங்களின் மத்தியிலே தற்காலிகமாக அகப்பட் டிருந்தாள்.

கண்ணகிக்கும், மதுரைக்கும் தொடர்புண்டு; பிரும் மேந்திரரின் மனைவியான நாகலட்சுமிக்கும் மதுரைக்கும் தொடர்புண்டு.

நாகலட்சுமிக்கும் நாகப்பாம்புக்கும் தொடர்புண்டு. ஆலவாய், என்று பெயர்கொண்ட மதுரையை, எல்லைக்

கோடு போட்டு காட்டிய, ஆல கால விஷம் கொண்ட பாம்பிற்கும் சதாசிவ பிரும்மத்திற்கும் தொடர்புண்டு.

இப்படித் தன் தொடர்புகளை எல்லாம் ஞானக்கண் கொண்டு பிரும்மேந்திரர் தன் பலஜன்மங்களை எண்ணினார். அதன் பலன் விராலி மலையில் அவரின் மனைவியை காத்தது.

சதாசிவ பிரும்மம், ஒரு நாகஸர்ப்பமாக முரடர்களுக்கு காட்சியளித்தார். பாம்பென்றால் படை நடுங்கும். முரடர்களோ, தங்களின் ஜுரப் பெரு மூச்சையே பாம்பின் மூச்சென்று எண்ணி காய்ச்சலில் நடுங்கி மயங்கினர். மானுமதுரையை விட்டு உன்மத்தராய் திரிந்துகொண்டிருந்த சதாசிவ பிரும்மம் பல யோக சித்திகளைக் கொண்டவர்.

மூன்றாவது கண் உள்ள இடத்திலே ஆக்யா சக்கரம் என்ற யோக நிலையிலிருந்து மனைவிக்கு, இருக்கும் இடத்திலிருந்து கட்டளை இட்டார் ஞானி. 'பகைவனுக்கு அருள்வாய் நெஞ்சே'—''உன் கணவன் சமநோக்குள்ள பிரும்ம ஞானி. என் மனைவியாகிய நீ...நான் எண்ணுவதைப் போன்று எண்ணி காய்ச்சலில் தவிக்கும் அவர்களுக்கு மருந்தைத் தேடு. சிறிது நாட்கள் பணிவிடை செய். நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று ஆணையிட்டார்.

மனைவி நாகலட்சுமி தெளிவு பெற்று உடனே செயல்பட்டாள். அவளுக்கு தெரிந்தது மதுரையில் திருஞானசம்பந்தர் பாடிய ஜுரம் நீக்குகின்ற தேவாரம். கணவனையும் இறைவனையும் நினைத்து ''மந்திரமாவது நீறு'' என்ற சம்பந்தரின் தேவாரத்தைப் பாடி, ஜுரம் கண்ட முரடர்களுக்கு விபூதி இட்டாள்.

ஜுரம் கண்ட காமுகர்கள் ஐவருக்கும் நாகலட்சுமியின் கை நெற்றியிலே பட்டதும் அவர்களின் காய்ச்சல் மறைகிறது. எங்கோ இருந்து கொண்டு அருள் செய்த சதாசிவ பிரும்மத்தின் அருள் நெருப்பில் தண்ணீர்

கொட்டியதைப்போன்று முரடர்களின் ஜுரத்தைத் திடீ ரெனத் தணித்தது.

உணவு கிடைக்காத போது பட்டினி என்பது காய்ச் சல். 'ஞானம்'கிடைக்காதபோது மனிதனுக்கு அஞ்ஞானம் காய்ச்சல். 'காமத்தில்' திருப்தி கிடைக்காதபோது காமுக னுக்கு அழிவே காய்ச்சல். ஞானத்தை எவருமே தீண்ட மறுப்பதால் அதுவே கடவுளுக்கு கொதிக்கின்ற நிரந்தரக் காய்ச்சல். இந்த எண்ணம் கொண்டவர் சதாசிவ பிரும் மம். ஆனுல் அவரின் மனேவியைச் சூழ்ந்து கொண்டிருந்த முரடர்கள் அவர்கள் அழியும் வரை காமக் காய்ச்ச லிலேயே தவித்தனர்

விராலிமலேயில் மனேவி நாகலட்சுமி சிறிது நாள் பணி விடை செய்கிருள். இந்த ரகசிய நிகழ்ச்சி, அவர் மௌனி யாகத் திரிந்த காலத்தில் இச்சம்பவத்தை பிரும்மேந்திரரே ஆற்று மணலில் எழுதிக் காட்டினுர். ஐயாவாளுக்கு 'சாஸ்த்திர ஸர்ப்பம்', 'சாஸ்த்திர நாகம்', என்ற பட்டங்கள் மைசூரில் ஜைனர்களால் கொடுக்கப்பட்டது.

இதை அவர் பிரும்மேந்திரரிடம் சொல்ல வந்தார். அப்பொழுது ஞானிகள் மௌனியாக விளங்கிய காலம். நாகம் என்ற பட்டம் கொண்டு விளங்கிய நண்பனேக் கண்டு மகிழ்ந்து உடனே நாகலட்சுமியை நினேத்துக் கொண்ட சதாசிவ பிரும்மம் விராலி மலேச் சம்பவத்தை மணலில் எழுதிக் காட்டுகிருர் என்பது குறிப்பு.

பிரும்மேந்திரர் பல ஜன்மங்களில் ஞானியாகத் திகழ்ந் தவர். ஒரு ஜன்மத்தில் அறுபத்திமூவரில் ஒருவரான ஆனய நாயஞராகத் திகழ்ந்தவர். சிவபெருமானேப் பாம் பின் வடிவிலே, மதுரை சோமசுந்தரக் கடவுளே பாட்டின் வழியாக இசைத்து நாதோபாசனே செய்து இறைவனு டன் கலந்தவர்.

போன பிறவியில் சதாசிவம் நெருரில் கண்ணனேப் பாடிப்பாடி நாதோபாசனே செய்தவர் என்பதும் குறிப்பி

டத்தக்கது. சிவனை ஆன்ம விசாரத்திற்குக் கொண்டு அதற்கு முன் பிறவியை நினைவில் கொண்டவர் என்பதும் குறிப்பு. இசைக்குப் பாம்பு அடிமையாவது போல், நாய ஞருக்கும் பிரும்மேந்திரருக்கும் சிவபெருமான் அடிமை.

நாய் வாலை நிமிர்த்தவே முடியாது. அப்படியே விராலி மலையில் காமுகர்கள் மனம் மாறவேயில்லை. நாக லட்சுமியிடம் வாலை ஆட்டினர். பாம்பு சட்டையை உரிப் பது போல் உங்களின் மனைவியாகிய நான் இந்த இரவில் முரடர்களின் முன்னே ஆடையைக் களையவே மாட்டேன்! என்று மனத்தில் சபதம் ஏற்ருள் நாகலட்சுமி.

ஆனுல வெங்காயத்தை இரண்டு கரங்களுக்கு மத்தி யிலே வைத்து லேசாகத் தேய்த்தாலே மேல் சருகு உரிந்து வெங்காயம் அந்தக் கணமே பிறந்த மேனியில் வெளிப் படும். அந்த நிலை நாகலட்சுமிக்கு ஆண்களின் முன் ஏற் பட நெருங்கியது.

காமுகர்கள் தனியறையில் ஆணையிட்டனர். ஆணைப் படி அவள் சிவப்பான கூறைப்புடவை என்ற கல்யாணப் புடவையைக் கட்டிக்கொண்டு வந்து காமுகர்களின் முன் நின்ருள். திருமணத்தில் தாலி கட்டும் சமயத்தில் கணவன் அவளைப் பார்த்தது வேறு, இப்போது இவர்கள் அவளைப் பார்ப்பது வேறு. கண்ணுல் காமுகர்கள் ரஸித்தனர்.

அடுத்த கட்டம் வரும் முன் தண்ணீர் குடித்து விட்டு வருகிறேன் என்று வீட்டினுள் சென்ருள். சென்றவள் கட்டிலுக்கு வரவில்லை என்பதால் காமுகர்கள் நாகலட்சு மியைத் தேடினர். இரவில் வேட்டை நாய்கள் போல் ஊரெல்லாம் தேடினர். ஓர் இடத்தில் ஆள் உயரம் பெரிய பாம்புப் புற்று. அதன் மீது நாகலட்சுமியின் கூறைப் புடவை கிடந்தது.



# 6

# தாமரைக் குளம்

மௌனியாக விளங்கிய சதாசிவ பிரும்மம், காவிரி ஆற்றங்கரை ஆற்று மணலில் பல ரகஸியங்களைத் தன் நண்பனுக்கு எழுதி உணர்த்துகிறார். இவைகளை உணர்ந்து கொண்ட ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் சதாசிவ பிரும்மேந்திரரிடம் சொல்லிக் கொண்டு புறப்படுகிறார். நேராக திருநாகேஸ்வரம் என்ற க்ஷேத்திரத்திற்கு வருகிறார்.

அங்கு தன் அநுஷ்டான ஆராதனைகளை முடித்துக் கொண்டு தானும் பிரும்மேந்திரரும் படித்த ஊரான திருவிசைநல்லூர் வந்தடைகிறார். அங்கு காஞ்சி காம கோடி பீடாதிபதி சங்கராச்சாரியார்—பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்-ஒரு பெரிய தத்துவ ஆராய்ச்சி சம்மேளனத்தைக் கூட்டியிருந்தார்.

அந்த சம்மேளனத்தின் மூன்றாவது நாள் தலைவர் ஸ்ரீதர ஐயாவாள். சம்மேளனம் துவங்கி நடந்து கொண்டிருந்தாலும், அக்ராசனர் ஐயாவாளின் மனமெல்லாம் ஆற்றங்கரை பிரும்மேந்திரரிடம் சுற்றியது. அவர் எழுதிச் சொன்னது மீண்டும் மனக் கண்முன் ஆடியது. இச் செய்திகளை ஐயாவாள் தன் சுவடிகளில் எழுதி வைத்திருந்தார்.

பாம்புப் புற்றையும் நாகலட்சுமியின் புடவையையும் பார்த்ததோடு காமுகர்கள் ஏமாந்தனர். விராலிமலைச் சுடுகாட்டின் பக்கத்திலே ஒரு பெரிய பாசி படர்ந்த தாமரைக் குளம். அதிலே யார் இறங்கினாலும், தற்கொலை

செய்து கொண்ட கன்னிப் பெண் நீர்வாழும் பெரிய பூதமாக மாறி, கால் வைப்பவர்களை இழுத்து விடுகிறது என்ற பீதி ஊர் முழுவதும் பரவி இருந்தது.

இந்தக் கதை நாகலட்சுமிக்குப் பேருதவியாய் இருந்தது. காமுகர்களை விட்டு ஓட்டம் பிடித்தாள் நாகலட்சுமி.

# 7

# நாகலட்சுமிக்கு மோட்சம்

கன்னிகழிந்த குமரிப் பருவம் அவளுக்கு. அவதூத அடிகளார் பிரும்மேந்திரரின் மனையாகி விட்டதனால் விதி அவளை விடவில்லை. ஞானியான அவர் ஞானத்தால் உடையற்றுத் திரிந்தார். இவளோ, சந்தர்ப்பவசத்தால் ஆடையின்றி இரவில் பயந்து பிறந்த மேனியில் ஓடினாள். பெண்ணான நாகலட்சுமிக்குப் பாசிக் குளம் அடைக்கலம் தந்தது. மானத்தை மறைக்கத் தண்ணீரில் தத்தளித்தாள். அவளுக்கு நீச்சல் தெரியவில்லை. இறப்பதற்கு உயிர் அவளை விடவில்லை.

தவளைகளைக் கெஞ்சினாள்; நீந்தத் தெரியவில்லை. பாம்பு களைக் கெஞ்சினாள். பயமின்றி அவளால் தண்ணீரிலும் வாழமுடியவில்லை. தன் கணவனை நினைத்து நீரிலே கண்ணீர் விட்டாள். எங்கோ திரிந்த சதாசிவ பிரும்மம் நாக லட்சுமிக்கு, 'உன் கற்பைக் காத்துக்கொள்' என்று அநுக்கிரகித்தார். அந்தக் கணமே பாசிக் குளத்துக் குமரி யான நாகலட்சுமிக்கு நீரிலேயே மீண்டும் பைத்தியம் பிடித்து விட்டது. உடல் வலி, காயம், ரத்தம், குளிர் எதுவுமே ஞானியைப் போன்று தெரியவில்லை.

குளத்தில் கிடந்த ஒரு பெரிய பாறையின் மீதும் தடுமாறி தத்தளித்து நின்ருள். என்ன ஆச்சரியம்! அவளின் கழுத்து மாத்திரம்தான் தண்ணீருக்கு வெளியே தெரிந்தது. அம்மணமும் மானமும் இறைவனுல் நீரில் மறைக்கப்பட்டது. இப்படிப் பல நாட்கள் நாகலட்சுமி பாசிக்குள் குமரியாக நின்ருள். ஊர் கூடிப் பார்த்தது. ஒரு நாள் பழைய காமுகன் ஒருவன் பார்த்து விட்டு, குளத்தருகே மாலை முதல் காவலாக கொக்கு போன்று காத்துக் கிடக்க ஆயத்தமாஞன்.

பாசிக் குளத்தருகே நாகலட்சுமிக்காக காத்துக்கிடந்த காமுகன் முன், பிரும்மேந்திரரின் மனைவி நீருக்குள் வாடிய மீனைப் போன்று இருந்தாள். இறைவன் அவளுக்கு அருள் புரிய ஆரம்பித்தார். காமுகர்கள் ஐவரின் தொழில் திருட்டு. அதிலே நால்வர் குளத்தருகே வந்தனர். காத்துக் கிடந்த ஒருவனையும் அழைத்துச் சென்று விட்டனர்.

நாகலட்சுமி பெருமூச்சு விட்டாள். விராலி மலை காட்டுப் பகுதியில் ஒரு பெரிய பாழும் கிணறு இருந்தது. அதன் அருகே திருடர்கள் ஐவரும் தங்களின் திருட்டு நகைகளை தனித்தனி மூட்டையாகக் கட்டினர்.

பத்திரப்படுத்த பாழும் கிணற்றில் போட்டனர். ஒரு ஓரத்தில் சென்று கள் குடிக்கும் சமயம்.

யாரோ ஒரு பெண் அம்மணத்துடன் ஆலம் விழுதைப் பிடித்துக் கொண்டு கிணற்றில் இறங்கிஞள்.

தங்கள் சொத்து திருட்டுப் போய் விடுமோ என்று எண்ணிய ஒரு திருடன் கிணற்றருகே வந்தான். ஒரு பெரிய பாருங்கல்லை கிணற்றில் போட்டான்.

மானத்துடன் வாழ நினைத்து கிணற்றில் இறங்கிய நாகலட்சுமி இறைவன் பாதம் அடைந்தாள்.



# 8

# காஞ்சியில் சதாசிவ பிரும்மம்

ஞானியாகத் திரிந்துகொண்டிருந்த பிரும்மேந்திரர் கொடுமுடி காவேரிப் படுகையில் பல நாட்கள் தியான சமாதியில் இருந்தார்.

வெள்ளத்தால் கொடுமுடி கிராமம் பல மாதங்கள் மணல் மூடிக் கிடந்தது. நீர் வடிந்ததும் அவரவர்கள் தங்களின் பயிர் நிலத்தைக் காண மண்வெட்டியால் நிலத்தை வெட்டினர்.

என்ன ஆச்சரியம்! ஒரு குடியானவன் தன் நிலத்தை வெட்ட, மண்வெட்டியில் ரத்தக்கறை! பயந்து ஓடினான். ஊர் கூடிற்று. குழி பறித்துப் பார்த்தனர்.

சதாசிவ பிரும்மம் தியான சமாதி கலைந்து மௌன மாக எழுந்து நடந்தார். ஒரு சமயம் பிரும்மேந்திரர் மறைந்து கிடந்த மணல் மேட்டின் அருகே தாயுமான அடிகளார் வெள்ளம் வடிந்த சில நாட்களுக்குப் பின் அங்கே வந்து அமர்ந்து, பொதுமக்களைச் சந்தித்தார் என்றும், சில துதிப் பாடல்களைச் சொல்லிக் கொண்டிருந் தார் என்றும், குடியானவன் மண்ணைத் தோண்டி மஹானைக் கண்டதை கொடுமுடி கிராம மக்கள், சொல்லி வியந்தனர்.

தாயுமான அடிகள் மௌன குரு வணக்கம் என்று பல பாடல்களைப் பாடியுள்ளார். மறைந்து கிடந்த நெரூர் சதாசிவ பிரும்மேந்திரரையே அவர் மௌன குரு என

குறிப்பிட்டார் என்பது வழக்கு. பிரும்மேந்திரர் சிவராமகிருஷ்ணனாக விளங்கிய காலத்தில் திருவிசைநல்லூர் சென்று அங்கே ராமசுபபா சாஸ்திரிகள் என்ற புலவரிடம் கல்வி பயின்றார்.

பின்னே இவரும், இவரது நண்பரான ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் என்ற போதேந்திர சுவாமிகளும் பிக்ஷாண்டார் கோயில மகாபாஷ்யம கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் என்பவரிடம் விசேஷ பாடமும் கற்றனர். ஐயாவாள் என்பவர் போதேந்திர ஸ்வாமிகளாகத் திரிந்ததும், துறவு பூண்டதும் போதேந்திரர் என்ற பெயர் கொண்டதும் பிரும்மேந்திரர் மண் மூடிக்கிடந்த கொடுமுடியில்தான்.

ஐயாவாளுக்கு போதேந்திர பட்டத்தைக் கொடுத்துத் துறவு பூணச் செய்தது சதாசிவ பிரும்மமே. ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் போதேந்திரராக ஆவதற்கு முன்னலேயே தஞ்சைப் பகுதியில் மிகவும் பிரபலமான யோகி. இல்லறத்தை நல்லறமாக நடத்திச் சித்தராகவே விளங்கி வந்தார். மிகப் பெரிய சாத்திர விற்பன்னரும் கூட.

இந்தக் காரணத்தினுல் இவர் தஞ்சை, மஹாராஷ்டிரம், மைசூர் முதலிய ஊர்களில் பண்டிதர்களுக்கு வழிகாட்டியாக விளங்கினர். சரபோஜி மன்னனுல் சன்மான, கௌரவ சன்னத்துகள் பெற்று மன்னனின் ஆஸ்தான பண்டிதராகவும் விளங்கி வந்தார். இதே காரணத்தால் இவரை, பதினெட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த காஞ்சி காமகோடி பீடாதிபதி, தன் அவையில் பிரதான பண்டிதராக ஆக்கி நல்ல கௌரவத்தையும் கொடுத்திருந்தார்.

அந்தக் கால கட்டத்தில்தான் வீட்டை விட்டு ஓடிய சிவராமகிருஷ்ணன், மானமதுரையில் ஜைன முனிவரிடம் ஆடையில்லா, பிரும்ம ஞானியாகிப் பல மாதங்கள் காட்டுப் பகுதிகளில் திரிந்து, எங்கோ ஓரிடத்தில் தன் பழைய நண்பனை ஐயாவாளைச் சந்திக்கிறர்.

பாசமேலீட்டிஞல் தன்னுடன் வைத்துக்கொள்ள ஐயாவாள்தான் பிரும்மேந்திரரை ஊருக்குள் அழைத்து வருகிருர். ஐயாவாளின் கட்டாயத்தின் பேரில் பிரும்மேந்திரர் சில காலம் காவிக் கோவணம் அணிகிருர். அவர்தான் ஞானியைக் காஞ்சி காமகோடி மடத்தில் இருக்க வைக்கிருர் என்பது குறிப்பிடத்தக்கது.

## 9

# சமயகுருவும் சமயவாதும்

அச்சமயம் பிரும்மேந்திரர் சங்கராசாரியாரைப் பார்த்து வந்தார் என்பது உண்மை. நண்பன் காட்டிற்கு ஓடாமல் இருக்கவே ஐயாவாள் பிரும்மேந்திரருக்கு காஞ்சி மடத்தில் பூரண சுதந்திரத்தை வாங்கித் தருகிருர். மடாதிபதிக்கும் இவரைப் பிடித்து விடுகிறது. சதாசிவ பிரும்மம் திடீரென மௌனியாவதற்கும் பல பண்டிதர்களின் பொருமையே காரணம். குறிப்பாக ராமசுப்பா சாஸ்திரிகள், கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் இவர்களின் தூண்டுதலே, காஞ்சி சங்கராசாரியரைச் செயல்படுத்த வைத்தது

பதினெட்டாம் நூற்றுண்டில் காஞ்சி காமகோடி பீடத்தை ஒரு சங்கராசாரியார் அலங்கரித்து வந்தார். அந்தத் தவ சிரேஷ்டரின் திருப்பெயர் பரமசிவேந்திர ஆசாரிய குரு எனக் கொள்ளலாம்.

திருப்பெருந்துறை என்ற ஆவுடையார் கோவிலில் பாண்டி மன்னனின் மந்திரியான ஒருவர் அரசாங்க கஜானவை எடுத்துக் கோவில் கட்டிஞர். அந்த சிவத்தலத்தின் பிராகாரத்தில் இருந்த , மரத்தடியில் சிவபெரு

மானேயே குருவாகப் பெற்ருர். அவரே அருள் முனி மாணிக்கவாசகராகத் திகழ்ந்தார்.

அந்தப்படி, சதாசிவ பிரும்மம் மானுமதுரையில் ஜைன முனியைக் கண்ட உடனேயே பூரண பிரும்ம ஞானி யாகத் திகழ்ந்து திரியலானுர். பழம் பழுத்திருந்து, வெளவால் வந்தது என்றுதான் சதாசிவ பிரும்மேந்திர ருக்கு குருமார்கள் கிடைத்ததைக் கொள்ள வேண்டும். இந்த வகையில் பிரும்மேந்திரருக்கு இரண்டாவது குரு காஞ்சி ஆசாரியாள்.

பிரும்மேந்திரருக்கு சதாசிவ பிரும்மம் என்ற பெயரை இட்டவர் ஜைன முனியே.

பிரும்மமாகந் திரிந்து கொண்டிருந்த சதாசிவம் காஞ்சி மடத்துத் திண்ணேயில் அமர்ந்திருந்தார். மடத் திற்கு வரும் பண்டிதர்களே எல்லாம் இவர் தம் வாதில் வென்று வந்தார்.

இதனுல் இவருக்கு ஊரில் பல விரோதிகள் இருந்தனர். பலர், இவ்விஷயத்தை காஞ்சி மடத்திற்கும், மஹாராஷ்டிர மன்னன் சரபோஜிக்கும் தெரிவித்து பிரும்மேந்திரரை அடக்கும்படியாக மறைமுகமாகத் தூண்டினர்.

இதற்கு மிக முக்கிய காரணம் பிரும்மேந்திரர் 2,500 வருடங்களுக்கு முன்னே தோன்றிய பகவான் புத்தனேயும் அவன் கொள்கைகளேயும் ஆதரித்து வந்ததே.

நம் சமயத்துக் குற்றங்களே களேய ஆரம்பித்தார். புத்தவாதத்தையும் நம் சமய வாதத்தையும் வைத்து அனேவரும் ஞானம், சித்தி, அறிவு, கடவுள் இதை அனுபவ பூர்வமாக அறிய எல்லோருக்கும் ஆதாரம் காட்டி சொல்லிக் கொடுத்தார்.

இதனுல் பழமையாளர்களின் மத்தியிலே பரபரப்பு ஏற்பட்டது. பலர் இவரை, இந்தப் பௌத்தனுக்கு காஞ்சி மடத்தில் என்ன வேலே என்று ஏசினர். சிலர் ஜைனன்

என்றும், நாத்திகன் என்றும் கூறி இவரை ஏசினர். சிலர் ஐயாவாளை ஏசினர். அவர்தான் பிரும்மேந்திரருக்கு இடம் கொடுக்கிறார் என்றனர். ஐயாவாள் சதாசிவத்தின் கருத்தைத்தான் தன் கருத்து என்று சொல்லி மன்னன் சரபோஜியிடம் பல விருதுகளைப் பெற்று விட்டார் என்றும் சொன்னார்கள்.

நண்பன் ஜைன குருவைக் காண அடிக்கடி மடத்தை விட்டுக் காட்டுக்குள் ஓடிவிடுவார். தர்க்கம் என்றால்தான் நாட்டில் இருப்பார் என்பது ஐயாவாளுக்கும் தெரியும்.

அந்தச் சலுகையை ஐயாவாள் காஞ்சி சங்கரர் மூலம் பிரும்மேந்திரருக்குப் பெற்றுத் தந்திருந்தார் என்பதும் உண்மை.

இது இப்படி இருந்தாலும் பிரும்மேந்திரரால் சமய உலகில் புரட்சி ஏற்பட்டது. இதற்குத் தாயுமான அடிகளும் மறைமுகமாக உதவினார். திடீரென்று சதாசிவ பிரும்மம் காஞ்சி மடத்தைவிட்டு குருவைத் தேடி காட்டில் மறைந்தார். பண்டிதர்கள் பரவசம எய்தினர்.

காஞ்சி சங்கராசாரியார் பதட்டம் அடைகிறார். ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாளைக் கூப்பிட்டு, பிரும்மேந்திரரை தேடச்சொல்கிறார்.

காஞ்சி மடத்தை விட்டு ஓடிய சதாசிவ பிரும்மம் பசியின்றிக் காடுகளில் உலாவி வந்தார்.

தீ, கிடைததை அப்படியே எரித்துப் பஸ்மம் செய்து விடும். மலைப்பாம்பு, உள்ள இடத்தில் இருந்து கொண்டு, தன் வழிக்கு எது வருகிறதோ அதையே ஆகாரமாகக் கொளளும். இவ்வண்ணம ஜாதிமத பேதமின்றி தன்னைத் தேடி எவர் உணவை அளிக்கிறார்களோ அதையே பிரும்ம ஞானிகள் பிச்சையாக ஏற்பர். இதற்கு அஜகர விருத்தி என்று பெயர்.

இவ்வண்ணம் "ஸர்வம் பிரும்மமயம்" என்ற கொள்கையுள்ள சதாசிவ பிரும்மம் காஞ்சி சங்கராசாரியாரின்

கொள்கைகளுக்கு ஏற்காத முறையில் எல்லாச் சாதியினரிடத்திலிருந்தும் எதையும் பிக்ஷையாக ஏற்று அஜகர விருத்தி செய்து வந்தார். பிரும்ம நிலையில் மயங்கிய இவருக்கு எதிலும் பேதம் புரியவில்லை.

தாயுமானவர், யோகி ஆவதற்கு முன் கேடிலியப்ப பிள்ளை எனப் பெயர் கொண்டவர்; கருணீகர் குலத்தைச் சேர்ந்தவர். இவர் துறவு பூணுவதற்கு முன். பிரும்மேந்திரரைக் காட்டில் அடிக்கடி சந்திப்பார். வட மொழிப் பயிற்சியையும், நான்கு வேதங்களையும் சதாசிவ பிரும்மமே பிள்ளை வகுப்பைச் சேர்ந்த தாயுமான அடிகளுக்கு ஆதியிலே முறைப்படி கற்றுத் தந்தார்.

இதற்கு ஐயாவாளையும் பிரும்மேந்திரர் கட்டாயப் படுத்திச் செய்ய வைத்ததுண்டு. இந்த விரோதமும் அந்தணர்கள் வழியாகக் காஞ்சி குருவுக்கும், மன்னன் சரபோஜிக்கும் காட்டுத் தீ போல் சென்றது. நண்பனைத் தேடிய ஐயாவாள் பிரும்மேந்திரரைக் காட்டில் தனியாகச் சந்தித்துக் கீழ்வரும் விவரத்தைச் சொல்கிறார் :

''பிரும்மேந்திரா, கி. பி. 1613 முதல் கிழக்கிந்தியக் கம்பெனி என்ற வெள்ளையர் நம் தேசத்தை முகலாயர்களின் வசமிருந்து ஆக்கிரமிக்கத் தொடங்கினர். காலமெல்லாம் துருக்கியர் கலாச்சாரத்தால் நம் மதம் பயந்தே வாழ்ந்தது. பின் கிறிஸ்துவரின் கலாச்சாரமும் நம் சமயத்தைப் பின் தொடர்ந்தது. இந் நிலையில் பிரும்ம ஞானியான உன் சொல் மிக வலிமையானது. நீ இச்சமயத்தில் சமுதாயத்தில் புத்தமத போதனைகளையும் சேர்த்துப் பேசினால் நம் தர்மமும், மதமும் அழியும் என்று காஞ்சி ஆசாரியார் நினைக்கிறார்கள். உன் புரட்சியை நிறுத்திக்கொள்ளவும் சொல்கிறார்கள்.

''காரண காரியத்தை எல்லாம் நான் ஏன் உன்னிடம் சொல்கிறேன் என்றால், நீ அடிக்கடி பிரும்மத்தில் லயித்து விடுவதால், உனக்கு உலக நியாய, அநியாயம் புரியாது.''

''நமது நாக்கு கெட்டு விட்டது என்பதால் எல்லோர் நாக்கையும் கெடுக்கக்கூடாது; எல்லோரும் ருசிக்கின்ற பிரும்ம ருசியில் விஷத்தையும் கலக்கலாகாது'' என்ற சதாசிவம், பிரும்மத்தில் லயித்துக் காட்டிற்குள் ஓடலானார்.

# 10

# வித்வத் சதஸும் மௌன விரதமும்

**ஆ**தி காலத்தில் ஒவ்வொரு மடத்தையும் சேர்ந்த மடாதிபதிகள் ஆறு மாதத்திற்கு ஒரு முறை சமய மாநாடு நடத்துவார்கள். அதற்கு 'வித்வத் சதஸ்' என்று பெயர். ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு ஜில்லா தலைநகர்களில் நடக்கும். இதற்கு அகில பாரதத்திலிருந்தும் பன்மொழியில் புலமை பெற்ற பண்டிதர்கள் வருவார்கள்.

விவாதங்கள் நடக்கும். இவர்கள் அனைவருக்கும், சன்மான—கௌரவங்கள் அந்தந்த மடாதிபதிகளால் வழங்கப்படும். இந்த முறையில் பரமசிவேந்திர ஆசாரியாள் என்ற காஞ்சி சங்கராசாரியார் ஒரு மாநாட்டைக் கூட்டியிருந்தார். அது நடந்து கொண்டிருந்த இடம் திருவாரூர் தியாகராஜர் கோயில் தேவாசிரிய மண்டபம். இந்த மண்டபத்தில் சிவபெருமானின் முன் தேவர்கள் மாநாடு கூடுவதாகப் புராண வரலாறு. அங்கே மாநாடு கோலாகலமாக நடந்துகொண்டிருந்தது. காஞ்சி ஆசாரியார் பரமசிவேந்திரர் முன்னிலையில் பன்னூற்று பன்மொழிப் பண்டிதர்கள் அமர்ந்திருந்தனர். பிரும்ம ஞானியான சதாசிவ பிரும்மத்தின் நண்பர் ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள்தான் அன்றைய மாநாட்டுத் தலைவர்.

பண்டிதர்களில் பலர் குதூகலமாக இருந்தனர். சதாசிவ பிரும்மம் இன்றுடன் வாயடைக்கப்போகிறான்,

மௌனியாகப் போகிறான் என்றும் பேசிக்கொண்டனர். குறிப்பாக, இந்த மாநாட்டிற்கு மஹாராஷ்டிர மன்னன் சரபோஜி ராஜாவின் ஆணைப்படி ஒரு மந்திரி வந்திருந்தான்.

அந்த சமயம் தஞ்சையைச் சார்ந்த பண்டிதர்கள் அனைவரும் சரபோஜியின் மான்யத்தைப் பெற்றவர்கள் என்பது நினைவுகூறத்தக்கது. இந்த மாநாட்டில் வந்து கலந்து கொள்ளும்படி காஞ்சி சங்கரர் பிரும்மேந்திரரை அழைத்திருந்தார். இதற்காகப் பல நாட்களுக்கு முன் ஐயாவாள் பிரும்மேந்திரரைச் சந்தித்து விவரம் சொன்னார். விவாதத்தில் மிகுந்த பிரியம் கொண்ட சதாசிவம் திருவாரூர் வரச் சம்மதித்தார். "உன்னுடைய தலைமையில் நடக்கும் மாநாட்டிற்கு நான் வர வேண்டுமென்றால், நீ நான் சொல்வதைக் கேட்க வேண்டும்" என்றார்.

ஐயாவாளை இழுத்துக்கொண்டு ஞானி கொடுமுடிக்கு ஓடுகிறார். ஆற்றங்கரையில் அமர வைக்கிறார்; ஞானி சிவனை அழைக்கிறார். நண்பன் கடவுளைப் பார்க்கிறான். பிரும்மேந்திரர் முடியைக் கொடு என்ற கொடுமுடியில்... ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாளுக்கு ஞான தீட்சை தந்து... பெயரை நீக்கி, போதேந்திர சுவாமிகள் என்ற பட்டத்துடன் ராம நாமத்தையும் சேர்த்து ஐயாவாளைத் துறவுபூணச் செய்கிறார். அப்பொழுது பிரும்மேந்திரரால் பாடப்பட்ட பாடலே... "பிபரே... ராம ரஸம்" என்ற பாடல்.

திருவாரூர் மாநாட்டில் பரபரப்பு, ஐயாவாள் தலைமை வகிக்க வேண்டிய இடத்தில் போதேந்திர ஸ்வாமிகள் தலைமை வகிக்கிறார். மாநாடு துவங்கியது. சரபோஜி மன்னனின் மந்திரி, பல பண்டிதர்களின் முன், ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாளுக்கு வழங்கிய மான்யங்கள், கௌரவப்பட்டங்கள் அனைத்தையும் திருப்பித் தரும்படி கேட்கிறார். இது மன்னன் ஆணை என்றும், காரணம் "பைத்தியமான சதாசிவம் எப்படியும் வாழலாம்; ஆனால்

பண்டிதர்—பிராமணர் என்ற நீர் தாயுமானவருக்கு
வடமொழி கற்பித்தது பாவம் என்று கூறப்படுகிறது''
என்று கூறுகிறார் மந்திரி.

அப்போதுதான் பிரும்மேந்திரரின் ஞான திருஷ்டி
போதேந்திரருக்குப் புரிகிறது. ''துறவு கொண்டவனிடம்
எதுவும் இல்லை. துறவு கொண்டவனிடம் எந்த மான்
யத்தைப் பெறுவீர்?'' என போதேந்திரர் முழங்க,
அதை மாநாடு கோபத்துடன் ஒப்புக்கொள்கிறது.

கோலாகல மாநாட்டுக்குப் போதேந்திர ஸ்வாமிகள்
தலைமை வகிக்க, எவரும் கவனிக்காத நிலையில் சதாசிவ
பிரும்மம்... பந்தலின் வெளியே குப்பை மேட்டில் நாய்
களின் பக்கத்திலே நின்றிருந்தார். போதேந்திரர் மாநாடு
நடத்திக்கொண்டிருந்தார். வெளியே நின்றிருக்கும்
நாயைப் பந்தலுக்குள் வரச்சொல் என்று சில பண்டி
தர்கள் முழங்கினர். சதாசிவ பிரும்மம் மாநாட்டிற்கு
வந்திருப்பதை காஞ்சி சங்கரர் பரமசிவேந்திர ஆசாரிய
குரு உணர்ந்தார். விவாதத்தில் கலந்துகொள்ள பிரும்ம
ஞானியான சதாசிவ பிரும்மம் உள்ளே நுழைந்தார்.

''நாய்க்கு மோப்பம் பிடிக்கத் தெரியும். இந்த
சதாசிவ நாய்க்கு பிரும்மத்தைத் தெரிகிறது'' என்று
சொன்னார் ஞானி. பந்தலுக்குள் நுழைந்தவர், சத
ஸுக்கு வணக்கம் செலுத்தி விட்டு தியாகராஜர் கோவி
லுக்குள் ஓடினார்.

சிவபெருமானை நோக்கி, பரமசிவனையே குருவாகப்
பாவித்து— ஒரு குரு வணக்கத் தோத்திரம் பந்தலிலுள்ள
பரமசிவேந்திரர் என்ற சங்கராசாரியாரை ஒரு முறை
திரும்பிப் பார்த்தும், மறு முறை திருவாரூர் தியாகராஜ
சிவனைப் பார்த்தும் சொல்லி முடித்தார். இவர் தலையை
திருப்பித் திருப்பி குரு வணக்கம் பாடியது, பசு மாடு
நாவினால் தனது கொண்டையை இரு பக்கங்களிலிருந்து
நக்க தலையசைத்ததைப் போன்று இருந்தது என்று
போதேந்திரர் குறிப்பிடுகிறார். இதன் காரணம்தான்

காடுகளில் அலேயும் பொழுது எவர் கண்ணில் பட்டாலும் சதாசிவ பிரும்மத்தின் தலே ஒரு புறம் திரும்பியதாகவே காணப்படும் என்றும் போதேந்திரர் குறிப்பிடுகிருர்.

காரணம் பந்தலில் பண்டிதர்களின் பக்கத்தை இவர் பார்க்கவேயில்லே. சிவனேயே எண்ணி சிவபுரத்தையே பார்த்தார். திருவாரூர் மூலஸ்தான லிங்கம் இந்திரனல் பூஜிக்கப்பட்டது; தன் பெயரையே சிவனுடன் சேர்க்க விரும்பினன் இந்திரன். அதனல் அந்தச் சிவனுக்குப் பரமசிவ இந்திரன், பரமசிவேந்திரன் என்று பெயர் வந்தது. மாநாடு நடத்திய சங்கராசாரியாருக்கும் பரமசிவேந்திர ஆசாரியார் என்று பெயர். ஆங்கு நின்று குரு வணக்கம் பாடிய ஞானியின் குரு வணக்கம் இருவரையும் பாடியதாகக் கொள்ளலாம்.

மாநாட்டுப் பந்தலுக்குள் வந்தார் பிரும்ம ஞானி. விவாதத்தில் கலந்து கொள்ள அழைப்பு விடுத்திருந்தாலும் பண்டிதர்களில் எவரும் சதாசிவ பிரும்மத்திற்கு அமர இடம் தரவில்லே.

பண்டிதர்களின் சூழ்ச்சியை உணர்ந்திருந்தார் போதேந்திரர். ஆனல் அவராலும் அப்பொழுது நண்பனுக்கு ஒன்றும் செய்ய முடியவில்லே. ஏன் இவனே இங்கு அழைத்தோம் என்று வருந்திக் கொண்டிருந்தார்,

ஒரு வயதுக் குழந்தை எவர் விரோதத்தையும் புரிந்து கொள்ளாது பார்ப்பதைப்போல் ஞானி மாநாட்டை நின்றபடி நோக்கினர்.

என்ன விவாதம் என்று சொல்லுங்கள். இல்லே விவாதத்திற்குப் பொருள் கொடுங்கள் என்பதைச் சபையைப் பார்த்து பிரும்மேந்திரர் இப்படிக் கேட்டார்:

''மேன்மை உள்ளவர்களே, எனக்குப் பிச்சையிடுங்கள்; இல்லேயேல் நானெடுத்த பிச்சையை உங்களுக்கிடுகிறேன், இச்சையுடன் புசியுங்கள்.''

அப்பொழுது அங்கிருந்த திருவிசை நல்லூர் ராமசுப்பா சாஸ்திரிகள் என்ற ஞானியின் ஆசிரியரும்,

மஹா பாஷ்யம் கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் என்ற பண்டிதரும்... காஞ்சி சங்கரரைத் தூண்டி, சதாசிவ பிரும்மத்தை மௌனியாகச் செய்து நம் இந்து சமயத்தைக் காப்பாற்றுங்கள் என்றனர்.

ஏகலைவனின் கட்டை விரலைக் கேட்டுப் பெற்றதைப் போன்று காஞ்சி பரமசிவேந்திர ஆசாரியர், 'சதாசிவா... பிச்சையிட என்னிடம் ஒன்றுமில்லை. இதோ எனது பிக்ஷா பாத்திரத்தில் குருவுக்கு சீடனுன நீ... இறக்கும் வரை மௌனியாகிறேன் என்ற வாக்கை இத்திருவாரூரில் பிச்சையாய் இடு' என்றார்.

ஒரு துறவிக்கு மற்றொரு துறவி பிச்சையிட முடியாது... சாஸ்திரத் தவறு, இந்த மாநாடே தவறு என்று போதேந்திரர் வாதிட்டும்... சதாசிவ பிரும்மம்... ஒரு பிடி மண்ணை எடுத்து காஞ்சி குருவின் கமண்டலத் தில் இட்டார்; மற்றொரு பிடியை போதேந்திரர் கையில் கொடுத்தார்.

"மண்ணுக்குள் ஜீவசமாதி ஆனதைப் போன்று மௌனியானேன்" என்று மணலில் எழுதிவிட்டு பிரும்மேந்திரர் நடந்தார்.

போதேந்திரர் ஆவேசத்தில் மாநாட்டைக் கலைத்தார். திரஸ்கரணிஎன்ற அஷ்டமாசித்தியில் ஒன்றைப் பெற்றவர் அவர். அதைப் பிரயோகித்து... பந்தலில் உள்ள அத்தனை பண்டிதர்களையும் நிரந்தர புத்தி பேதமாக்கினார்.

தனது ஆசிரியர்களான ராமசுப்பா சாஸ்திரிகள், கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் இருவரின் கல்வி, பாண்டித் யம், இகபரசுகம் அனைத்தையும் ஆகர்ஷித்து... ஏதாவது ஒரு ஜன்மத்தில் பிரும்மேந்திரரைப் பணிந்து பிறகு பெறுங்கள்... என்று சபித்தார். அங்கிருந்து புறப் பட்டவர் திருநாகேஸ்வரம் போய்ச் சேர்ந்தார்.



## 11

# மௌனமும் கொந்தளிப்பும்

தஞ்சை ஜில்லாவில் உள்ளது திருநாகேஸ்வரம் என்ற ஊர். இங்குள்ள சிவாலயம் நாயன்மார்களால் பாடல் பெற்றது. ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் இந்த ஊரில் பெண் எடுத்துத் திருமணம் செய்து கொண்டவர். இவர் போதேந்திர ஸ்வாமிகளாகத் துறவு பூண்டதால் இவரின் மனைவியும், இரண்டு குழந்தைகளும், இவரின் இஷ்ட தெய்வமான ஸ்வர்ண கிருஷ்ணனும், பூஜைப் பெட்டியும், மாமனார் வீடான திருநாகேஸ்வரத்தில் அடைக்கலம் புகுந்திருந்தது.

சந்நியாசி ஆனதால் ஊர் எல்லையில் நின்று தனது நெற்றிக்கண் உள்ள இடத்தில் "ஆக்யா" சக்கரத்தின்... வழியாக மாமனார் வீட்டிற்கு நினைத்தபடி செய்தி அனுப்புகிறார். காவிரி மணற்றிடலில் ஊர் கூடி போதேந்திரரைத் தரிசிக்கிறது. மனைவியும் குழந்தைகளும் மாமனாரும் வணங்கி பூஜைப் பெட்டியை முன்னே வைக்கின்றனர்.

ஊரும் வீடுமாகச் சேர்ந்து அரிசியைப் பிக்ஷையாக இடுகின்றனர். எனது பிக்ஷையைக் காஞ்சி மடத்தில் சேர்த்து விடுங்கள் என்று அவர் முழங்குகிறார். திருநாகேஸ்வரம் ஒரு சித்தனால் நடுங்கியது. இதன் பிறகு இவர் ஊர் திரும்பவே இல்லை. கடைசிக் காலத்தில் ராமஜபத்துடன் காவிரியோரமாகத் திருவாவடுதுறை அருகில் கோவிந்தபுரத்தில் சமாதி அடைகிறார். பூஜைப் பெட்டியை எடுத்துக் கொண்ட போதேந்திரர் தஞ்சையை விட்டு திருநெல்வேலி நடக்கிறார். கோபால சமுத்திரம் என்ற இடத்தில் கிருஷ்ண விக்கிரகத்தையும், மற்றவைகளையும் ஆற்றில் எறிகிறார்.

ஒரு பால்ய விதவை—திருநெல்வேலி செங்கோட்டை கிராமத்தில் ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாளை மானஸீக குருவாக ஏற்றிருந்தாள். அதற்காக அங்கு சென்ற போதேந்திரர், அவளுக்கு உபதேசம் செய்து ஞானக் கண்ணை திறக்கிறார். அவளே பல ஞானப் பாடல்களைப் புரட்சிக் கருத்தில் தமிழில் எழுதிய "ஆவுடையக்காள்" என்பவர். இவரை திருநெல்வேலி மக்களைக் காட்டிலும் தஞ்சையே நன்கு அறிந்திருந்தது.

மௌனியான நெரூர் சதாசிவ பிரும்மம் திருவாரூரை விட்டார். காவிரியின் கிளை நதியான குடமுருட்டியாற்றின் மணலில் கீழ்வரும் வாசகங்களை எழுத, அதை மிகப் பெரிய கூட்டம் படித்துக் கொண்டிருந்தது:

"காஞ்சி காமகோடி பீடாதிபதி பரமசிவேந்திர.... குருவே— நெருப்புக் கோழி இறக்கையிருந்தும் பாலைவனத்தில உயரப் பறக்காமல் வேகமாக ஓடுகிறது. பிரும்மம் சரீரம் எடுத்து விட்டது. உயர்ந்த நிலையில் இருந்தால் யாருக்குப் புரியும். மௌனமாக நடந்து காட்டு, ஞானியே வாழ்ந்து காட்டு என்று எனக்கு மௌனமா? உமது கருணையால் ஞானம் என்ற நெருப்பை விழுங்கினேன்.

"அதைப் பாதுகாக்க மௌனம் என்ற சமாதியில் ஊதினேன். பாலைவனத்தில் நெருப்புக் கோழி தலையை மாத்திரம் மணலுககுள் புதைத்ததே? ஊரில் உள்ள இறைவனை அறியாத வறட்டுத் தவளை பண்டிதர்களுக்காக சதாசிவ பிரும்மம் ஞானத்தை... கோழிபோல் மறைக்க வேண்டுமா? இல்லை நிறைய கோழி முட்டைகளை கருத்து மணலில் இடட்டுமா? மௌனமா? எழுதியது சீடன் நெரூர் சதாசிவ பிரும்மம்."

திரும்பினார் பிரும்மேந்திரர். கூட்டத்தில் போதேந்திரர் இதைச் சுவடியில் எழுதிக் கொண்டார். பிரும்மேந்திரர் எழுதிய மணலைக் கையில் அள்ளினார். குடமுருட்டியை விட்டு ஓட்டம் பிடித்த ஞானிகள் காவிரியின் மற்றொரு உபநதியான வெட்டாற்று மணற்ப்பரப்பில் அமர்ந்தார்.

வேறு திக்கில் ஓலைச்சுவடியும், மண்ணுமாக போதேந்திரர் புதுக்கோட்டை வந்தார். அங்கே காஞ்சி பரமசிவேந்திரர் புதுக்கோட்டை மன்னனின் விருந்தாளியாக பூஜை நடத்திக்கொண்டிருந்தார். நடந்தே வந்த போதேந்திர சிம்மம்... காஞ்சி குருவின் முன் ஓலைச்சுவடியை போட்டு, 'சதாசிவம் மறையவில்லை' என்றார்.

சதாசிவம் மௌனியானான் என்ற உண்மை காட்டுத் தீ போல், நாடு முழுவதும் பரவியது.

சதாசிவ பிரும்மேந்திரரின் மூதாதையர்கள், மஹாராஷ்ட்டிரப் பகுதியிலிருந்து வந்தவர்கள் என்பதால், மஹாராஷ்டிரத்தில் கொந்தளிப்பே ஏற்பட்டிருந்தது. அந்தக் காலத்திலேயே இவர் புத்த பகவானைப் பற்றிச் சொல்லி, பொதுமக்களை நன்கு கவர்ந்திருந்தார்.

அதனால், பிரும்மஞானி மௌனம் என்றதும், மஹாராஷ்டிர மக்கள் சரபோஜி மன்னனை எதிர்க்கத் தொடங்கினர். இவரின் தாய்மொழி தெலுங்கு என்பதால் ஆந்திர தேசத்துப் பண்டிதர்களும், காசி வித்வான்களும் பிரும்மேந்திரருக்கு காஞ்சி பரமசிவேந்திரர் மௌனம் கொடுத்தது தவறு எனப் பேசினர்.

அந்த நூற்றாண்டில் வாழ்ந்த ஜைன, பௌத்த பண்டிதர்கள், சந்நியாசிகள் அனைவரும், மஹாராஷ்டிர மன்னனுக்குக் கண்டனம் தெரிவித்தனர்.

இதற்கு ஆதரவாக பாரதம் முழுமையாக சமயப் பண்டிதர்கள் பலர், மஹாபாஷ்யம் கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள், திருவிசைநல்லூர் சுப்பராம சாஸ்திரிகள் இவர்களின் தூண்டுதலால், ஞானி மௌனமானதைக் கண்டித்ததோடு நில்லாமல், அவர்களின் சாஸ்திரங்களை ஆராய்ந்து, அதிலே உள்ள தவறுகளை வெளிப்படுத்தினர். தவறான பண்டிதர்களின் நூலுக்கு சரபோஜி மன்னனும், புதுக்கோட்டை மன்னனும், விருது அளித்து கௌரவத்தைக் குறைத்துக் கொண்டார்கள் என்று உரைக்கத் தொடங்கினர்.

போதேந்திரர் தன் வாக்கு என்ற சாபம் பண்டிதர்களின்பால் பலித்தது கண்டு, அதற்காக திருநாகேஸ்வரம் கோவிலில் ஒரு மண்டலம் உண்ணுவிரதம் மேற்கொண்டார்.

தஞ்சை கொதித்தது. புதுக்கோட்டை மன்னன், போதேந்திரர் மூலம் உண்மையை சரபோஜி மன்னனுக்கும், காஞ்சி பரமசிவேந்திரருக்கும் தெரிவித்தான். முடிவில் மக்களுக்கு மன்னனும், குருநாதரும் பணிந்தனர். போதேந்திர யதிகளுக்கு முன்னே சரபோஜி ஆணையிட்டான். அதன்பேரில் நாடெங்கிலும், தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலையத்திலும் உள்ள மஹாபாஷ்யம் கோபாலகிருஷ்ண சாஸ்திர்கள், திருவிசைநல்லூர் சுப்பராம சாஸ்திரிகள் இவர்களின் நூல்களின் பிரதிகள் அனைத்தும் சுவடு தெரியாமல் எரிக்கப்பட்டன என்பதும், போதேந்திரர் நட்பும், ஞானிக்காக அவர் சாதித்த முறையும் சதாசிவ பிரும்மேந்திராளின் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்கது.

## 12

# பிக்ஷையும் சிக்ஷையும்

திருவாரூரை விட்டுக் குடமுருட்டியை விட்ட சதாசிவம், வெட்டாற்று மணலில் அமர்ந்திருந்தார், இரண்டு கைகளை சேர்த்துப் பாத்திரம் போன்று வைத்துக் கொண்டு பிச்சை எடுப்பது "கர பிக்ஷை" எனப்படும்.

ஊன் என்ற இந்தத் தசைகளோடு கூடிய உடம்பு வாடாமல் இருக்க சந்நியாசியும் உணவைப் பிச்சை எடுத்து சாப்பிடத்தான் வேண்டும். ஊன் என்ற உணவு இல்லையானல் ஊன் என்ற உடம்பு வாடும், குறையும். அது ஆன்மாவுக்கு ஊனமே. சதாசிவம் என்ற நான் உணவு இன்றி உடம்பு இல்லை என்ற பயமே இல்லாதவன்.

ஊனமே இல்லாத ஞானமே எனக்கு ஊன் என்ற உடம்பாதலால்...அடியேனுக்கு துறவிகள் பெறும் ஊன பிக்ஷை என்ற உணவு பிக்ஷை வேண்டாம்; ஞான பிக்ஷையே வேண்டும் என்று பிரும்மேந்திரர் வெட்டாற்று மணலில் குருவுக்கு எழுதினார். அதை ஊர் படித்தது.

இதனால் ஞானியின் குரு சற்று கோபமுற்றார். உடன் சதாசிவத்துக்குக் கட்டளை பிறப்பித்தார். சதாசிவம் இன்று முதல் உனக்கு ஊன பிக்ஷை வேண்டாம், ஞான பிக்ஷையே போதும். இரண்டு கைகளை ஏந்திக்கூட நீ பிக்ஷை எடுக்கக்கூடாது; கர பிக்ஷையையும் விட்டுவிடு. ஊர் உடனாகிய நீ நடப்பதை என்னிடம் ஆற்று மணல் விஷயத்தைப் போன்று வந்து சொல்ல வேண்டும் என்றார் பரமசிவேந்திரர்.

கட்டளையை ஏற்ற சதாசிவ பிரும்மம் மௌன நிலையுடன் சமாதியாகும் வரை உண்பதை விட்டார். ஆள் காட்டி விரல், கட்டைவிரல் இரண்டையும் தக்ஷிணாமூர்த்தி ★ சின்முத்திரை காட்டியிருப்பதைப் போன்று பிரும்மேந்திரர் இரண்டு கை விரல்களையும் அப்படியே வைத்துக் கொண்டு அலைந்தார்

சில சமயம் இவருக்கு பசி ஏற்படுமோ என்னமோ தெரியவில்லை. எந்த ஊரிலும் ஊர்க் கோடியில் எச்சில் இலைகளில் நாய்களுடன் படுத்து இருட்டிய பின்பு சதாசிவம் புரளுவார். கைகள் இரண்டும் சின் முத்திரையை விலக்குவதில்லை. இந்த தாத்பர்யத்தை உணர்த்த இன்றும் நெரூர் உற்சவத்தில் சாப்பிட்ட இலையில் வியாதி நீங்க, பக்தர்கள் எச்சில் இலைகளில் உருளுகிறார்கள்.

சதாசிவ பிரும்மத்தின் குருநாதர் பரமசிவேந்திர ஆசாரிய குரு, ஒரு சமயம் நவராத்திரி விழாவினை மிகச்

---

★ சின் முத்திரை : உபதேசக் குறியாகச் சுட்டுவிரல் நுனியைப் பெருவிரல் நுனியுடன் சேர்த்துக் காட்டும் யோக ஞான முத்திரை.

சிறப்பாகக் கொண்டாடிக் கொண்டிருந்தார். இந்த விழாவினை அவர் திருவிடைமருதூர் என்ற க்ஷேத்திரத்தில் கொண்டாடிக் கொண்டிருந்தார். ஒன்பது நாளைக்கும் காலையிலே பூஜைகள் நடக்கும்; மாலையிலே பலரின் சொற்பொழிவு நடக்கும். ''தினமும் இப்பொழுதெல்லாம் ஒவ்வொரு நாளும் விழாவின் முடிவில் நான்தான் பேச வேண்டி உள்ளது. சதாசிவம் என் மடத்துத் திண்ணையில் விழுந்து கிடந்தான். அப்பொழுதெல்லாம் அவனே தினமும் பேசுவான். இப்பொழுது மௌனியாக எங்கு அலைகிருனோ?'' என்று சுவாமிகள் ஒரு நாள் வருந்தினர் என்பது குறிப்பிடத்தக்கது. ''பல லட்சணங்களில்—அவ லட்சணங்களில் பல நவராத்திரிக் கொலு பொம்மைகள். பொம்மைகள் வித விதமாக இருந்தாலும், எல்லாவற்றிற்கும்...... ''நவராத்திரி பொம்மை'' என்ற பெருமைப் பெயர் ஒன்றுதான்.

''லட்சண அவலட்சண குணங்களில் மனிதர்கள் எவ்வளவோ இருந்தாலும், எல்லா இடத்திலும் கடவுள் என்ற பிரும்மம் ஒரே லட்சணமாகத்தானே இருக்கிறது. அவன் ஒரே அழகுதான். நாம்தான் அவனை மறைக்கும் அவலட்சண பொம்மைகள். குழந்தைக்கு நல்ல பொம்மையைப் பிடிக்கும். குருவே, இந்த சதாசிவ பொம்மையை உங்களுக்குப் பிடிக்கவில்லையா? என்று அவன் கேட்டான்'' என்று, குரு சீடனைப் பற்றி நவராத்திரியில் சரஸ்வதி பூஜையன்று இரவு பிரசங்கித்தார்.

பண்டிதர்கள் குருநாதன் அழுவதைக் கண்டு பிரமித்தனர். பாமரன் சதாசிவம் திருநெல்வேலி தாமிரவருணி ஆற்று மணலில் மௌனமாய் எழுதிக்கொண்டிருந்தார். திருவிடைமருதூரில் பரமசிவேந்திரர் சதாசிவ பிரும்மத்திற்கு ஒரு ஓலையை எழுதினர். அதை பகிரங்கமாகப் பண்டிதர்களின் முன் படித்தார்:

''சதாசிவம்! நீ அழகான பொம்மை-குழந்தை. நான் உன்னையே விரும்பினாலும் என்னால் உன்னை வைத்து

விளையாட முடியவில்லை. நீ எனக்காக மௌனத்தில் ஒன்று செய். பொருளிலே பரம்பொருளைப் பார். அதை உணர்ந்து என்னிடம் வா. பிறருக்கும் உணர்த்த முடிந்தால் பொம்மையாய் என்னிடம் வா'' என்று படித்ததை எல்லோரும் கேட்டனர். ஓலை, தூதன் மூலம் திருநாகேஸ்வரத்தில் உள்ள போதேந்திரரிடம் சென்றது. அதை அவர் தாமிரவருணி ஆற்றங்கரையில் சேர்த்தார். ஆணையை ஏற்ற சதாசிவ பிரும்மம், ஈரமுள்ள தரையில் எல்லாம் ''பொருளிலே, பரம்பொருளைப் பார்... கட்டையிலே நெருப்பைப் ப்பார். கட்டை பொருள்; கட்டையிலே நெருப்பு பரம்பொருள்'' என்று எழுதிக்கொண்டே சென்றார்.

''சதாசிவத்துக்குள் ஞானம் நெருப்பு; சதாசிவ கட்டை கடவுள்—இது நான் இருக்கும்போது. நான் இறந்தால் நீங்கள் எரித்தால் என் மேலே நெருப்பு கடவுள்—அது சாப்பிடும் இந்த சதாசிவ கட்டை ஞானம்'' என்றும் எழுதினார். திருநெல்வேலியிலிருந்து நடந்த ஞானி விராலி மலைக்காட்டிலே வந்து நின்றார்.

ஒரு இறந்த சடலம். அதை வைத்துச் சிதைக்குத் தீ மூட்டி இருந்தனர். பிரும்மேந்திரர் அங்கே அமர்ந்து ''கட்டையிலே தீ; தீயிலே கட்டை...கட்டை ஞானம் தீ ஞானம். கட்டையிலே பொருள் கட்டையிலே பரம் பொருள்; பரமசிவேந்திரா நீயே பொருள், நானே பரம் பொருள், நானே நீ... நீயே நான்''— என எழுதிச் சிதையை முறைத்தார்.

சுடுகாடு வெட்டியான் சாமி, என்று அலறி, பிரும்மேந்திரரின் காலில் விழுந்தான். ''நாகலட்சுமி அம்மா அநாதையா கெணத்துலே விளுந்து செத்துடுச்சிங்க. வெளியே எடுத்துப் போட்டவன் நாந்தாஞ்சாமி. விராலி மலை முருகன் கோயில் குருக்களையா கோயில் தேவஸ்தானத்திலே மன்றாடிப் பிச்சை கேட்டு, கோயில் பிச்சைக் காரங்களெல்லாம் பிச்சை போட்டுச் சிதைக்குத் தீ

வெச்சோம் சாமி! முருகனே தங் காசிலே தீ இட்டாஞ் சாமி'' என்று மயங்கினன். சிதை ஓய்ந்தது; சதாசிவம் நகர்ந்தார்; விராலிமலை முருகனைக் கண்டார்; ஓடினர் திருநெல்வேலி.

## 13

# ராமேஸ்வரத்தில் பிருர்மம்

ராமநாதபுரம் ஜில்லா; திருமால் என்ற மஹா விஷ்ணு பள்ளி கொண்டுள்ள க்ஷேத்திரங்களில் இங்கும் ஒரு கோயில் உண்டு. பெருமாள் படுத்திருக்கின்ற கோலம் தென் இந்தியாவில் பல இடங்களில் இருப்பினும் விஷ்ணு காவிரி நதியை மிக அதிகமாக விரும்புகின்றவன். உன்னிப் பார்த்தால் காவிரி உற்பத்தியாகின்ற தலைக்காவிரி என்ற ஸ்ரீரங்கப்பட்டணத்தில் ரங்கராஜன் படுத்துக் கிடக்கிருன்.

அடுத்துக் கிடக்கின்ற பள்ளிகொண்ட கோலம் அவனுக்கு ஸ்ரீரங்கம் காவிரிக் கரையில். அப்படிக் காவிரி பாயாத பூமியானல் ரங்கராஜன் ஒரு யுக்தியைச் செய்வான். எல்லா நதிகளும் கலக்கின்ற மிகப் பெரிய இடம் கடல் என்றல், எல்லா நதிகளின் தண்ணீரும் எப்படியும் கடலில் கலந்து விடும் என்பதால், அவன் காவிரியை விட்டால் சமுத்திரக் கரை ஓரமும் படுப்பான்.

இப்படித் திருமால் படுத்த கடற்கரை ஓரங்கள் சில, அதிலே ஒன்று ராமேஸ்வரக் கரை ஓரமுள்ள தர்ப்பசயனம் என்ற கோயில். தர்ப்பைப் புல்லின் மீது கடவுள் படுத்திருக்கின்ற தலத்திற்கு திருபுல் அணை அதாவது திருப்புல்லாணி என்றனர். தாமிரவருணி நதிக்கரையை விட்ட சதாசிவ பிரும்மம் ராமேஸ்வரம் வரை ஓடி வந்தார். தர்ப்ப சயனம் என்ற ஊரில் தர்ப்பைப் புல்லின் மீது படுத்துக் கிடந்தார்.

சர்வ வல்லமை பொருந்திய அகத்திய முனிவன், பல நதிகள் எல்லாம் தன்னிடம் ஒடுங்கியும், ஒடுங்காத அலைகடலைத் தன் கையிலே ஒடுக்கி வயிற்றிலே ஒடுக்கினார். அகத்தியர் கடலை உண்டார். "அந்தக் கல்விக் கடலை அகத்தியனை எங்கு காணலாம்? கண்டால் கல்விக் கடலையே நாமும் உண்ணலாம் என்றுதான் சதாசிவ பிரும்மமாகிய அடியவன் காவிரிக் கரை ஓரமாகவும், கடற் கரை ஓரமாகவும் நடக்கிறேன், சுற்றுகிறேன். என்னைப் போன்று பெருமாள் என்ற திருமாலும் காவிரி ஓரத்தையும், கடற் கரையோரத்தையும் தேடினான். நான் ஓயவில்லை, நடக்கிறேன், கடவுள் ஓய்ந்து விட்டான். படுத்துத் தூங்கிவிட்டான்."

இப்படி ராமேஸ்வரம் மணலிலே மௌனியான சதாசிவ பிரும்மம் எழுதி எழுதி மகிழ்ந்தார். பெரிய கூட்டம் ஞானிகளைச் சூழ்ந்துகொண்டது. ஞானிகள் காரணமின்றி இங்கே உலவவில்லை; தாயுமான அடிகளைச் சந்திக்கத்தான் இங்கே வந்திருக்கிறார் என்று பேசிக் கொண்டனர். உண்மை அதுவே ஆயிற்று. தாயுமானவர் தர்ப்பசயனத்தில் பிரும்மேந்திரரைப் பார்த்துக் கண்ணீர் வடிக்கிறார்.

மௌனியுடன் பேச முடியாது என்பதால் ஒரு பத்திரத்தை பொது மக்களின் முன்னே வாசிக்கிறார். "மௌன குருவே வணக்கம். நான்காவது வருணத்தைச் சேர்ந்த அடியவனுக்கு தாங்கள் நாட்டுக்குப் பயந்து காட்டிலே வடமொழியைக் கற்பித்தீர். எதிர்ப்பைச் சமாளித்து எல்லாம் பிரும்ம மயம் என்று திரிகிறீர். நீங்கள் மௌனமான பிறகு ஊரிலே சிறிய சலசலப்பு. ஒரு சிலருக்கே என்ற வடமொழியை சதாசிவம் ஊருக்கே என்று சொன்னான். ஊருக்கே என்ற ஒரு ஞானி ஏன் ஊர் பாஷையான தமிழிலே இறைவனைப் பாடாமல் ஒரு சிலருக்கே என்ற வடமொழியில் இறைவனைப் பாடியும் நூல்கள செய்தும் இருக்கிறான். என்னதான் பேசினாலும் சதாசிவம் இறைவனோடு கூட வர்ணாஸ்

ரமத்தை விடவில்லை என்று அறியாத மக்களிடம் விஷத்தைத் தூவுகின்றனர். தமிழிலே சண்டமாருதப் பிரச்சாரம் செய்கிற நீங்கள், தலைவன் சிவபெருமானைத் துதிக்க வடமொழியைக் கொண்டதென்ன? அடியவனும் பரமனைத் துதிக்க எவ்வழியை நாடவேண்டும்?'' என்பதை தாயுமானவர் பிரும்மேந்திரரின் முன் படித்தார். அதற்கு பிரும்மேந்திரர் மணலில் எழுதினர்:

''...கவர்ச்சி முகத்தில் வசிக்கிறது. சொன்னவுடன் மனிதனைப் பற்றி இழுக்க இறைவனாலும் முடியாது; தமிழால் முடியும். அதனுல் பேசிய காலத்தில் ஞானப் பிரச்சாரத்தைத் தமிழில் செய்தேன். சமயத்திற்கு தத்துவங்கள் முக்கியம். ஆனுல் தத்துவங்கள் மக்களை ஈர்ப்பதில்லை. அதனுல் கடவுளை மனிதன் உணர்வதில்லை. முகத்தால் வசீகரிக்கப்பட்ட பெண்ணுடன் கலக்க காமம் மேலுந்த அவளின் அங்கங்களே தேவையாகின் றது. அதனுல் ஒலிக்கவர்ச்சி என்ற அங்கங்கள் வடமொழி என்றுனது. தத்துவத்தை அங்கமாக்கி இறைவனை வடமொழியில் பாடினேன்.

''முகமில்லாத பெண்ணை விரும்பமாட்டார்கள் என்ப தால் தமிழிலே இறைவனை விளம்பினேன். என்னைப் போன்று நீயும் தத்துவ ஆணியை அடி. ஞான மலரை தமிழிலே மணமாக வீசு. என்னைப் பின்பற்றுகின்ற நீ, என் போன்று ஒரு சமயம் உன் காலும் நீ யோக நித்தி ரையில் இருக்கும் பொழுது சிதைத் தீயில் ஊனமாகும். என்னைப் போன்று மௌனியாவாய். உன் பாடல்களில் தமிழும், வடமொழியும், பெண்ணின் முகமும், அங்கமும் போன்று கலந்தே வரும். நமக்கு மொழி பேதமில்லை. இறைவனேடு கலக்கின்ற போதமே கீதம்'' என பிரும் மேந்திரரின் விடையை மணல் காட்டியது.



# 14

# கண்ணன் கட்டளை

சதாசிவ பிரும்மம் மௌனியானது முதல் ஆத்ம ஸ்நேகிதராக விளங்கிய போதேந்திர சுவாமிகள், திருவிசை நல்லூர், மதுரை, மானுமதுரை, ஞானிகள் மௌனம் பெற்ற திருவாரூர் இப்பகுதிகளை மிதிப்பதில்லை எனச் சபதங் கொண்டு வாழ்ந்து வந்தார். இதனால், பெரும் பகுதியை திருநாகேஸ்வரம் என்ற க்ஷேத்திரத்திலேயே கழித்து வந்தார்.

அந்தக் கால கட்டத்தில் இவரது கனவிலும் நினைவிலும் ''கோபாலன்'' என்ற கண்ணன் இவர் முன் அடிக்கடி தோன்றுவான். குழந்தை அடம் பிடிப்பதைப் போன்று கதறி அழுது தொந்தரவு செய்வான். எதையாவது விளையாடக் கொடு எனக் கேட்பான். பசிக்கிறது, பால் இல்லையென்றாலும் நாமரஸம் என்ற நாமஸங்கீர்த்தன துதியையாவது கொடு என்று அடிக்கடி கேட்பான். இடையிடையே ''பஜரே கோபாலம்'' என்று சதாசிவம் மௌனத்திற்கு முன் பாடிய பாட்டு வனந்தரங்களிலிருந்தும் இவர் காதுகளில் ஒலிக்கும்.

இதனால் போதேந்திரர் இரவு பகல் தூக்கமின்றி கிராமம் கிராமமாக ஓடுவார். சாலையில் போகின்ற குழந்தைகளை எல்லாம் எடுத்துக் கொண்டு ஓடுவார். ''கண்ணா, நான் என்ன செய்யவேண்டும் என்று சொல்'' என்பார். சில குழந்தைகளை ''சதாசிவம் எங்கே எங்கே?'' என்று கேட்பார். அறியாக் குழந்தைகள் கை காண்பிக்கும் திக்கிலே ஓடுவார்.

இந்நிலையில் ஊர் இவரையும் பைத்தியம் என்றது.

அலைந்த போதேந்திரருக்கு ஒரு நாள், இவர் கோபால சமுத்திரம் குளத்தில் எறிந்த கண்ணன் தன் கையை மாத்திரம் காட்டினான். அந்தக் "கை" இவருக்கு வழி காட்டியது. அதையே தொடர்ந்தார். அது ஒரு இடத்தைக் காட்டி அமரச் செய்தது.

போதேந்திரர் பாதையின் மீது அமர்ந்த இடம் திருக்குற்றாலம் என்ற சிவாலய க்ஷேத்திரம். கண்ணனின் ஆணைப்படி போதேந்திரர் மிகப் பெரிய நூல் ஒன்று படைக்கிறார்.

மஹாராஷ்டிர முறை, வட நாட்டு முறை இவைகளை யும், தென்னாட்டு முறைகளையும் மனத்தில் கொண்டு இறைவனை "பஜன்" என்ற பஜனை முறையில் நாம சங்கீர்த்தனத்திற்கே—ஒரு முறையான நூல் செய்கிறார். அதுவே தென்னாட்டில் முதல் நூல். அதைப் பின்பற்றித் தான் தென்னாட்டில் *காலக்ஷேப பத்ததி* என்ற முறை பிறந்தது. அதனால் இதற்கு சரபோஜி மன்னன் பாராட்டி விருதுகள் வழங்குகிறான்.

திருவிசை நல்லூர் ஐயாவாள் என்ற போதேந்திரர் சமாதியடைந்த கோவிந்தபுரத்தில் இன்றும், காலக்ஷேபம் அரங்கேற்றம் செய்பவர்கள், அங்கு சென்று, பிரார்த்தித்து விட்டுத்தான் துவக்குவது வழக்கம். கண்ணன் சொல்லி, போதேந்திரர் செய்ததால் அவரின் முறையை நாம் கையாளும்பொழுது அவரை வணங்கினால் கண்ணன் அருள் கிட்டும் என்பதே காரணம். நம்மாழ்வாரை வணங்கினால்தான் பெருமாள் அருள் கிட்டும் என்பது போல்.

ஐயாவாள்தான் நாம சங்கீர்த்தனத்துக்கு முதல் நூல் வடிவம் கொடுத்தார். போதேந்திரர் என்ற காஞ்சி சங்கரர், ஐயாவாளுக்குப் பின் வந்த காலத்தில் ஐயா வாளின் நூலை வைத்து நாம சங்கீர்த்தனத்திற்குப் பெரிய

முதல் நூல் செய்தார். இதனுல் அவர் வேறு, இவர் வேறு என்று, காஞ்சி மடக் குறிப்புகளில் காண்கின்றன.

ஒருவர் செய்த அதே நூலே மற்றவரும் அப்படியே செய்து, முதல் நூல் செய்த பெருமையாக உண்மையான நூலாசிரியர்கள் செய்ய மாட்டார்கள். குருநாதனையும் குறிப்பிடாமல் இருக்க மாட்டார்கள். அதனுல் இக் குறிப்புகள் சரியில்லே. ஐயாவாள் என்ற போதேந்திரர் நூலே முடிக்கிருர். நூலே முடித்த போதேந்திரருக்கு சதாசிவ பிரும்மேந்திரரின் ஞாபகம் வருகிறது. ஓலேச்சுவடிகளே எடுத்துக் கொண்டு நடக்கிருர்.

சுவடு பார்த்து நடப்பதுபோல் பிரும்மேந்திரரைத் தேடிச்செல்ல மணலிலும், ஈரத்தரையிலும் அவர் எழுதிய எழுத்துக்களேப் பார்த்துச் செல்வதுதான் போதேந்திரரின் வழக்கம். நடந்த போதேந்திரரின் கண்கள் ஒவ்வொரு அடிக்கு ஒரு முறை கீழ்க்கண்ட வாசகங்களேப் படித்துக் கொண்டே சென்றன:

"எறும்புப் புற்றைப் பார்த்து தேடித் தேடி நொய் போடுவது போல் என்னே நாடி நாடி ஓடி வா.

''தூசி விழுந்தால் உடனே கண் இமை, கண்ணே மூடிக்கொள்ளும்; லேசாகக் காற்றிலே எது வந்தாலும், என் காது கொள்ளும், வாய் இமை போன்று உடனே மூடும், உள்ளம் துள்ளும்''.

இப்படி எங்கு பார்த்தாலும் கிராமம், நகரம், காடு, மேடு என்று எழுத்துக்கள் தென்பட்டன.



# 15

# சித்தர் விளையாடிய சித்து

போதேந்திரரை எழுத்துக்கள் புதுக்கோட்டையில் கொண்டு போய் நிறுத்தியது. சதாசிவத்தை ஆவலுடன் பார்க்க வேண்டிய கண்கள் புதுக்கோட்டை மன்னன் விஜயரகுநாத தொண்டமானைப் பார்த்தன.

மன்னன் தரையில் எழுதிக்கொண்டே இருந்தான். மக்கள் குரு பக்தியைக் கண்டு வியந்தனர்.

சதாசிவ பிரும்மத்தை குருவாக அடைய மன்னன் விரும்புகிறுன் என்பது, அவனும் தரையில் எழுதுவதிலிருந்து போதேந்திரருக்கு மின்னல் போல் விளங்கியது. போதேந்திரர், புதுக்கோட்டை மன்னன் விஜயரகுநாத தொண்டமானின் ஆசையை உணர்ந்தார். சதாசிவ பிரும்மேந்திரர் மௌனி. அவரை மன்னன் குருநாதனுக அடைய விரும்புகிறுர். பேசாத மௌனி எப்படி வாய் திறந்து மன்னனுக்கு உபதேசம் செய்ய முடியும்?

இந்த நிலையை, நாம் சொன்ஞல், மன்னன் உள்ளம் நொந்து விடுவான்.

சித்தம் போக்கு சிவன் போக்கு, என்கிற பிரும்மேந்திரர் வரும்வரை மன்னன் எத்தனைக் காலம் காத்திருப்பது?

"இன்னமும் ஒரு நாற்பது நாளைக்குள் பிரும்மேந்திரரை, குருவாக அடியேன் அடையவில்லை என்ருல், புதுக்கோட்டை மன்னனுகிய நான், திருக்கோகர்ணம என்ற சிவன் கோயிலின் முன்னே, தீக்குளிக்கப் போகிறேன்" என்று, ஊரிலே உள்ள சிற்பிகள் அனைவரிடமும் சொல்லி, பாறைகள், மலைகள் உள்ள இடங்களிலெல்லாம் கல் வெட்டில் செதுக்கி வைக்கச் சொல்லியிருந்தானும்.

இதைப் பார்க்கின்ற பிரும்மேந்திரர், தானுக குரு ஸ்தானத்தைக் கொள்ளட்டும்; மன்னன் சரியான சீடன் என்று, போதேந்திரர் உணர்ந்து அகம் நெகிழ்ந்தார்.

புதுக்கோட்டையில் இருந்தபடியே சதாசிவ பிரும்மத்தை எண்ணிஞர். அது ஞானிகளுக்குத் தெரிந்து விட்டது. என்ன ஆச்சரியம்! பிரும்மேந்திரர் எங்கோ குழந்தைகளுடன் சித்து விளையாடுவதைப் போதேந்திரர் பார்க்கிருர்.

கரூரில் சில குழந்தைகள் பிரும்மேந்திரரைச் சூழ்ந்து கொண்டு, ''மதுரையில் திருவிழா நடக்கிறது, நாங்கள் அங்கு சென்று சிவனது ரிஷப வாகனத்தைப் பார்க்க வேண்டும்'' என்றனர்.

குழந்தைகளை மகிழ்விக்க எண்ணிய பிரும்மேந்திரர், தன்னைத் தொட்டுக் கொள்ளச் சொன்ஞர். இறைவஞல் சித்து விளையாடிஞர். குழந்தைகளும் அவரும் மதுரை திருவிழாவிற்குச் சென்று ஒரு மணி நேரத்துக்குள் மீண்டும் கரூர் திரும்பினர்.

இதைக் கேள்வியுற்ற சில பெரியவர்கள் ஞானிகளை அண்டினர். வேறு ஒரு சமயம், தாங்களும் ஸ்ரீரங்கம் சென்று திருவிழா பார்க்கவேண்டுமென்றனர். பேதமுள்ள மனிதர்களிடம் பேதமில்லாத ஞானி, அவர்களையும் கரூரிலிருந்து உடனே ஸ்ரீரங்கம் அழைத்துச் சென்று திருவிழா காண்பித்தார். உடனே தனது யோக சக்தியால் அவர்களைக் கரூரிலேயே கொண்டுவந்து விட்டுவிட்டார்.

பல சித்திகள் கொண்ட பிரும்மேந்திரருக்கு இதுவும் ஒரு சித்து. குழந்தை மனத்துடன் பெரியவர்கள் என்னை அணுகிஞல், கடவுள் ஞானியிடம் சித்து விளையாடுவான் என்று, ஞானி சில சமயம் மணலில் எழுதிக் காட்டுவார். இது மௌனியாக இருக்கும்போது நடந்தது என அறிய வேண்டும்.

குழந்தைகளுடன் விளையாடிய பிரும்மேந்திரருக்கு

புதுக்கோட்டையில் போதேந்திரர் நினைத்தது தெரிந்தது. இவருக்கும் அவர் செய்த சித்து தெரிந்தது.

திடீரென்று மன்னன் புளகாங்கிதம் அடைந்தான். புதுக்கோட்டையில் பிரும்மேந்திரர் மணலில் சில மந்தி ரங்களை எழுதி, அதை மன்னனுக்கு மௌனமாக உப தேசித்தார். போதேந்திரரும், மன்னனும், பிரும்மேந் திரரை திருக்கோகர்ணம் சிவாலயப் பிராகாரத்தில் தரிசித்தனர்.

மந்திரம் எழுதிய மணலை அள்ளி எடு என பிரும்மேந் திரர் சைகை காண்பித்தார். மன்னன் மணலைக் கையில் அள்ளினுன்.

உடனே சதாசிவ பிரும்மேந்திரர், சித்து விளையாடி மறைந்தார். மன்னனும், போதேந்திரரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்தனர். போதேந்திரர், மன்னனிடம் விடைபெற்றுக் கொண்டு சதாசிவம் இருக்கும் இடத்தை நோக்கி நடக் கிருர்.

மன்னன் அன்று முதல் மணலைத் தங்கப் பெட்டியில் வைத்து வழிபடுகிருன். அவனே புதுக்கோட்டைப் பகுதி யில் உள்ள திருக்கோகர்ணம் ஆலயத்தில் பிரும்மேந்திர ருக்குச் சிலை எடுத்து வழிபடுகிருன்.

பிறகுதான் விஜயரகுநாத தொண்டமான் நேரில் சதாசிவ பிரும்மத்தைப் பார்க்கிருர்.

புதுக்கோட்டை மன்னன் யாகசாலை என்ற வேள்வி யின் முன்னே நின்றிருந்தான். மௌனியான சதாசிவ பிரும்மம் யாகத்தை நடத்தி வைக்கும் பணியில் ஈடுபட்டி ருந்தார். அந்த யாகத்தை செய்துவைக்கக் கேட்டுக் கொண்டிருந்தவன் வேறு ஒரு மன்னன்.

அந்த மன்னனையும், ஞானியையும் பார்த்து யாரோ ஒரு பௌத்த பிக்ஷு, யாகத்தையும், ஞானிகளையும் எதிர்த்துக் கேள்விகள் கேட்டுக்கொண்டிருந்தான்.

இவை அனைத்தும் புதுக்கோட்டை மண்ணிலேயே நடப்பதை மன்னன் விஜயரகுநாத தொண்டமான் உணர்ந்தான். காரணம் பக்கத்தில் போதேந்திரர் நின்று கொண்டிருந்ததை அடிக்கடி பார்க்கிறான்.

''யாகம் என்ற தீயை வளர்த்தால் சிவபெருமான் வெளிப்படுவான் பார்க்கலாமென்றால், நீ வளர்க்கும் தீயின் ஒளியிலே கடவுள் தெரிவதற்கு அவன் என்ன அவ்வளவு ஒளி குறைந்தவனா? இல்லையென்றால் சிவன் இருட்டா?'' இதற்கு வேறு ஒரு மன்னனும் பௌத்தனைப் பார்த்துச் சிரிக்கிறான்.

''தீ பிடித்து எரிகின்ற இரண்டு கட்டையை ஒன்றாகச் சேர்த்தால் இரண்டும் இரண்டு தீயல்ல, ஒரு தீ. இப்படி உலகமும் தீ, இறைவனும் தீ என்று ஞானத்தைக்கொண்டு ஞானமாக எல்லாவற்றையும் தனித்தனியாக உன்னால் பார்க்கவும் முடியாது. ஒட்டுமொத்தமாய் ஒன்றாகச் சேர்த்து எல்லாவற்றையும் இறைவனாகவும் உன்னால் பார்க்க முடியாது.

உலக வாழ்வு என்னும் அஞ்ஞான சுகபோகங்களையும் வைத்துக்கொள். அதன் மத்தியிலே சிறிதளவு ஞானம் என்ற சிறிய தீயை மூட்டி, இருளில் மறைந்திருக்கும் ஒளி என்னும் கடவுளைப்பார்'' என்று விடைகொடுத்தார் ஞானி.

''அடிக்கடி யாகத்தில் விறகு இடுகிறாயே? இடையிடையே நெய் ஊற்றுகிறாயே? இரண்டு ஆடுகளை பலியிட வைக்கிறாயே? அதன் பொருள் என்ன? ஒவ்வொரு முறையும் நெருப்பு அணையாமலிருக்க யாகத் தீயில் விறகு இட்டால் உன் ஞானம் குறைந்து குறைந்து வளருகிறதா? ஞானம் வந்தவுடன் கடவுள் தெரியும் என்று சொல்லி விட்டு இப்படிச் செய்தால் கடவுள் ஞானம் வேறா? நீங்கள் வளர்த்துக் கொண்டிருக்கும் ஞானம் வேறா?'' என்று புத்த பிக்ஷு கேட்டான்.

''ஞானிகள் ஞானத்தைவளர்ப்பதில்லை. அது விளங்கு

கிறது. புத்தியை வைத்துக் கடவுளைப் பார்த்தால்தான் ஒப்புக்கொள்வேன் என்று சொன்னால் எவ்வளவு பெரிய நிலையிலும் புத்தி கண்ணை மறைக்கும்.

இதை புத்தனுக்கும் பௌத்த பிக்ஷுவுக்கும் சொல்லத் தான் நான் வளர்க்கும் யாகத்தில் தீ அணைகிறது; நான் விறகைப் போடுகிறேன், நெய்யையும் ஊற்றுகிறேன், புத்தி என்னும் புகை கண்ணை மறைக்கிறது.

புகை வரும் சமயத்தில் இறைவன் வந்துவிடுகிறான். நம்பிக்கையுள்ள ஞானிகள் கண்ணைத் திறந்து கொண்டு. கடவுளைப் பார்த்து விடுகிறார்கள்.

புத்தியை உபயோகப் படுத்துகிறவன் சந்தேகம் வந்து கண்ணை மூடிக்கொள்கிறான்,'' என்றார் பிரும்ம ஞானி.

அந்த மன்னன், ஆடு என்றான் ஞானியைப் பார்த்து.

''கடவுள் மறையாமலேயே இருக்கிறான். அவன் மறைந்திருக்கிறான் என்று ஞானமில்லாமல் தீயை மூட்டி அதன் பின் அவனைப் பார்க்கலாம் என்பது ஞானியான எனக்கு ஒரு பலியாடு.

கடவுள் இல்லவே இல்லை. அவன் இருந்தால் அவனைப் புத்தியைக்கொண்டு பார்க்கிறேன் என்று சொல்லி, புத்தி என்ற புகையால், தன் ஞானத்தையே மறைத்துக் கொள்ளும் ஒரு புத்தி மற்றொரு பலி ஆடு'' என்றார் சதாசிவ பிரும்மம்.

அந்த மன்னனும், பௌத்த பிக்ஷுவும் அகமகிழ்ந்தனர்.

திடீரென்று புதுக்கோட்டையில், புதுக்கோட்டை மன்னன் பிரும்மேந்திரரின் முன் பேசினான். ''ஞானியே தங்களின் யாகத்தில நான், எனது அரச குடும்பம், என் நாட்டு மக்கள் என்ற அத்தனை ஆடுகளும பலிக்காக நிற்கின்றோம். இப்பொழுதே பலி கொள்ளுங்கள், அடுத்த பிறவியில் ஞானத்துடன் கடவுளைப் பார்க்கிறோம்,'' என்றான்.

இதைக் கேட்ட பிரும்மேந்திரர் மன்னனுக்கு அருள் செய்துவிட்டு, மீண்டும் குழந்தைகளின் மத்தியில் கரூரில் இருந்தார். பிறகே புதுக்கோட்டை மன்னன் சதாசிவ பிரும்மம் தனக்காக எங்கிருந்தோ வந்து சித்து விளையாடி உபதேசித்துச் சென்றார் என்று தெரிந்து கொண்டான்.

''பிரும்மேந்திரர் வட நாட்டில் ஒரு பௌத்த மன்னனுடன் இப்படி யாகம் வளர்த்துத் தத்துவத்தை விளக்கி முன்பு கடவுளை உணர்த்தினார். அதைத்தான் நீ புதுக்கோட்டையில் பார்த்தாய்'' என்பதை போதேந்திரர் சொல்ல மன்னன் மீண்டும் சந்தோஷப்பட்டான்.

## 16

# முத்துப் பல்லக்கு

ஒரு சமயம் சதாசிவ பிரும்மம் தென் இந்தியாவின் காட்டுப் பகுதிகளில் நடந்துகொண்டிருந்தார். இரவு நேரம். அந்தப் பகுதியில் திருடர்கள் கொள்ளையடிக்கச் செல்லும் வழியில் ஞானிகளை வழி மறித்தனர். சில திருடர்களுக்கு சித்தரைத் தெரிந்திருந்தது.

கடவுளின் அதிசயத்தைக் காண்பிக்க வேண்டும்; தங்களின் கொள்ளைக்கு அருள் புரியவேண்டும் என்றும் வம்பு செய்தனர்.

முக்கண்ணைத் திறந்து விஷயத்தைத் தெரிந்து கொண்டார் பிரும்மேந்திரர்.

''பக்கத்து நாட்டு ராணி நாளை இரவு இந்த வழியாகத் தன் தாய் வீட்டிற்குச் செல்ல இருக்கிறாள். அரசாங்க கஜானாவில் உள்ள அத்தனை நகைகளையும் போட்டுக்கொண்டு முத்துப் பல்லக்கில் செல்வாள்; நீங்கள் செல்வத்தைக் கொள்ளையடித்துச் செல்லுங்கள். அதன்

கிறது. புத்தியை வைத்துக் கடவுளைப் பார்த்தால்தான் ஒப்புக்கொள்வேன் என்று சொன்னால் எவ்வளவு பெரிய நிலையிலும் புத்தி கண்ணை மறைக்கும்.

இதை புத்தனுக்கும் பௌத்த பிக்ஷுவுக்கும் சொல்லத் தான் நான் வளர்க்கும் யாகத்தில் தீ அணைகிறது; நான் விறகைப் போடுகிறேன், நெய்யையும் ஊற்றுகிறேன், புத்தி என்னும் புகை கண்ணை மறைக்கிறது.

புகை வரும் சமயத்தில் இறைவன் வந்துவிடுகிறான். நம்பிக்கையுள்ள ஞானிகள் கண்ணைத் திறந்து கொண்டு கடவுளைப் பார்த்து விடுகிறார்கள்.

புத்தியை உபயோகப் படுத்துகிறவன் சந்தேகம் வந்து கண்ணை மூடிக்கொள்கிறான்,'' என்றார் பிரும்ம ஞானி.

அந்த மன்னன், ஆடு என்றான் ஞானியைப் பார்த்து.

''கடவுள் மறையாமலேயே இருக்கிறான். அவன் மறைந்திருக்கிறான் என்று ஞானமில்லாமல் தீயை மூட்டி அதன் பின் அவனைப் பார்க்கலாம் என்பது ஞானியான எனக்கு ஒரு பலியாடு.

கடவுள் இல்லவே இல்லை. அவன் இருந்தால் அவனைப் புத்தியைக்கொண்டு பார்க்கிறேன் என்று சொல்லி, புத்தி என்ற புகையால், தன் ஞானத்தையே மறைத்துக் கொள்ளும் ஒரு புத்தி மற்றொரு பலி ஆடு'' என்றார் சதாசிவ பிரும்மம்.

அந்த மன்னனும், பௌத்த பிக்ஷுவும் அகமகிழ்ந்தனர்.

திடீரென்று புதுக்கோட்டையில், புதுக்கோட்டை மன்னன் பிரும்மேந்திரரின் முன் பேசினான். ''ஞானியே தங்களின் யாகத்தில நான், எனது அரச குடும்பம், என் நாட்டு மக்கள் என்ற அத்தனை ஆடுகளும் பலிக்காக நிற்கின்றோம். இப்பொழுதே பலி கொள்ளுங்கள், அடுத்த பிறவியில் ஞானத்துடன் கடவுளைப் பார்க்கிறோம்,'' என்றான்.

இதைக் கேட்ட பிரும்மேந்திரர் மன்னனுக்கு அருள் செய்துவிட்டு, மீண்டும் குழந்தைகளின் மத்தியில் கரூரில் இருந்தார். பிறகே புதுக்கோட்டை மன்னன் சதாசிவ பிரும்மம் தனக்காக எங்கிருந்தோ வந்து சித்து விளையாடி உபதேசித்துச் சென்றார் என்று தெரிந்து கொண்டான்.

"பிரும்மேந்திரர் வட நாட்டில் ஒரு பௌத்த மன்னனுடன் இப்படி யாகம் வளர்த்துத் தத்துவத்தை விளக்கி முன்பு கடவுளை உணர்த்தினார். அதைத்தான் நீ புதுக் கோட்டையில் பார்த்தாய்" என்பதை போதேந்திரர் சொல்ல மன்னன் மீண்டும் சந்தோஷப்பட்டான்.

# 16

# முத்துப் பல்லக்கு

ஒரு சமயம் சதாசிவ பிரும்மம் தென் இந்தியாவின் காட்டுப் பகுதிகளில் நடந்துகொண்டிருந்தார். இரவு நேரம். அந்தப் பகுதியில் திருடர்கள் கொள்ளையடிக்கச் செல்லும் வழியில் ஞானிகளை வழி மறித்தனர். சில திருடர்களுக்கு சித்தரைத் தெரிந்திருந்தது.

கடவுளின் அதிசயத்தைக் காண்பிக்க வேண்டும்; தங்களின் கொள்ளைக்கு அருள் புரியவேண்டும் என்றும் வம்பு செய்தனர்.

முக்கண்ணைத் திறந்து விஷயத்தைத் தெரிந்து கொண்டார் பிரும்மேந்திரர்.

"பக்கத்து நாட்டு ராணி நாளை இரவு இந்த வழியாகத் தன் தாய் வீட்டிற்குச் செல்ல இருக்கிறாள். அரசாங்க கஜானாவில் உள்ள அத்தனை நகைகளையும் போட்டுக்கொண்டு முத்துப் பல்லக்கில் செல்வாள்; நீங்கள் செல்வத்தைக் கொள்ளையடித்துச் செல்லுங்கள். அதன்

பிறகு நீங்கள் தினம், தினம் திருட்டுத் தொழிலைச் செய்து பொருள் சேகரிக்க வேண்டாம். அவளது நகைகளைத் திருடிய உடனேயே நிரந்தரச் செல்வந்தர் களாகி விடலாம்.

இன்றுகூடத் திருடப் போகாதீர்கள். ஞானியின் சொல்லைக் கேளுங்கள்.

முத்துப் பல்லக்கில் ராணி வந்தால்தான் திருடலாம். ராஜா வந்தால் என்னிடம் திரும்பி வந்துவிட வேண்டும்.

இந்த வண்ணம் ஞானியின் சொல்லைக் கேட்டால் உங்களைப் பணக்காரர்களாக ஆக்குகிறேன்'' என்றார். திருடர்கள் ஞானிக்கு இசைவு தந்து ஓடிவிட்டனர்.

மறுநாள் ஞானியின் வாக்குப்படி திருடர்கள் காட்டில் முத்துப் பல்லக்கைச் சந்தித்தனர்.

பல்லக்கின் தீவட்டிக்காரனை மடக்கினர். முத்துப் பல்லக்கைக் கண்டு ஆச்சரியப்பட்டனர். ஒரு திருடன் பல்லக்கின் கதவில் இருந்த பட்டுத் துணியை விலக்கினான். என்ன வியப்பு !

உடனே ஞானி சொன்ன வண்ணம் ராணி இல்லை. அவளுக்குப் பதிலாக அவளின் பெரிய உருவப் படம் இருந்தது. கஜானா நகைகள் எல்லாம், படத்திற்குப் போட்டிருந்தார்கள்.

சில திருடர்கள் நகைகளைத் திருட முயன்றனர். ஒரு திருடன் அதைத் தடுத்தான். ராணி இல்லாவிட்டால் திருடக்கூடாது என்று ஞானி சொன்னதை நினைவுபடுத் தினான்.

உருவப் படம், உயிருள்ள உருவமல்ல என்பதை எடுத் துச் சொன்னான். ஞானியின் சொல்லைக் கேட்போம், அவர் சொற்படி நடந்தால் அவரே நம்மைப் பணக்காரர்களாக ஆக்குவார் என்று உபதேசித்தான்.

அதன்படி திருடர்கள், பல்லக்கை விட்டனர். ஞானி

யிடம் சென்று தங்களின் அதிர்ச்சியைச் சொன்னார்கள். ''நாளையும் இதே மாதிரி செல்லுங்கள் உயிருடன் ராணி இதே பல்லக்கில் எல்லா நகைகளையும் போட்டுக்கொண்டு வருவாள். இன்றும் நீங்கள் ராணியை ஒன்றும் செய்யக் கூடாது. அவளின் நகைகளை மாத்திரம்தான் திருடிச் செல்ல வேண்டும்'' என்றார் சதாசிவ பிரும்மம்.

'ராணி சிறிதளவு ஞானம் உள்ளவள். திருடர்களாகிய உங்களை அவள், நேற்று நம்பவில்லை. நீங்கள் நகைகளுடன் ராணியையும் அபகரித்துச் சென்று விடக்கூடும் என்று நினைத்தாள். அதைச் சோதிக்கவே முதலில் இந்த வழி யாகத் தன் படத்தை மட்டும் அனுப்பினாள்' என்றார்.

ஞானிகளைப் புரிந்துகொண்டார்கள். நாங்கள் நகைகளைத்தான் விரும்புவோம், ராணியை விரும்ப மாட்டோம் என்று திருடர்கள் கோஷமிட்டனர்.

அதே வண்ணம் மறு நாள் திருடர்கள் முத்துப் பல்லக்கைச் சந்தித்தனர். பல்லக்கில் ராணியையும் கண்டனர். ஞானியின் சொற்படி திருடர்கள் நகைகளை மாத்திரம் கொள்ளையடித்துக் கொண்டனர். ராணியை விட்டு விட்டுச் சென்றனர்.

என்ன ஆச்சரியம்! மறு நாள் காலை திருடர்கள் ஏமாந்தனர். திருடர்கள் திருடிய அத்தனை நகைகளும் போலி நகைகளாக இருந்தன. ராணியை வைதபடி, திருடர்கள் ஞானிகளை அணுகி அவரைத் தாக்கத் துவங்கினர். அப்பொழுது பக்கத்துக் கிராமத்திலிருந்து ஆயிரக் கணக்கான ஏழைகள் ஓடிவந்தனர்.

தாங்கள் ஒவ்வொருவரும் ராணியினிடமிருந்து நகைகளைப் பெற்றுக் கொண்டதை ஞானிகளிடம் காண் பித்து அகமகிழ்ந்தனர்.

'அந்தக் கிராமத்தின் வழியாகச் சென்று, ஒவ்வொரு வருக்கும் ஒவ்வொரு நன்மையையும் செய்துவிட்டுப்போ என்று கடவுளும், சதாசிவ பிரும்மமும் ராணியின் கனவில்

சொல்லிச் சென்றதால் ராணி இப்படிச் செய்ததாகச் சொன்னார்கள்' என்று ஏழைகள் ஞானியினிடம் சொல்லி வணங்கினர்.

அடிக்க வந்த திருடர்கள் மனம் நொந்தனர். "கடவுளுடன் உலக வாழ்வையும் நீங்கள் கேட்டால் உலக வாழ்வைப் பெற்ற நீங்கள் கடவுளை மறக்கலாம். அதனால் ராணியான கடவுளை, நீங்கள் அவளின் நகைகளை நீக்கி, விரும்பினால் கடவுள் என்ற ராணி ஞானியின் சொல்லைக் கேட்ட மக்களுக்கு ஞானியின் வழியாக சித்து விளையாடு கிறாள்' என்றார் பிரும்மேந்திரர்.

நானும் கடவுளும் இப்படி ஒரு முறை திருநெல்வேலி யில், சித்து விளையாடி இருக்கிறோம் என்று சதாசிவ பிரும்மம் மணலில் எழுதிக் காண்பித்தார்.

# 17

# சிவப்புக்கல் மூக்குத்தி

ஞானி சதாசிவ பிரும்மேந்திரரின் இயற்பெயர் சிவராமகிருஷ்ணன். இவருக்கு பால்யத் திருமணம் என்ற குழந்தைப் பருவத்திலேயே திருமணம் செய்து வைத்து விட்டார்கள்.

இன்றைய நிலைப்படி, அன்றைய ஞானியின் திருமணம் சட்ட விரோதம். என்றாலும், இறைவன் ஞானிகளின் வாழ்க்கையில் வந்து விளையாடும்பொழுது சட்ட விரோத மாகத்தான் விளையாடுகிறான்.

இவரின் மனைவி நாகலட்சுமிக்கு பிரும்மேந்திரருடன் திருமணம் ஆகும்பொழுது வயது ஏழு. ஞானிகளுக்கு வயது பதினொன்று.

இவரின் மனைவி பூப்பு எய்தியது பதினாலாவது வயதில். ஞானிகளுக்கு அப்பொழுது வயது பதினெட்டு.

பதினெட்டில் ஞானிகள் முதலிரவைப் பாராமல் திடீர் என்று துறவியானார்.

முதலிரவு இவரை பயமுறுத்தியது. அதற்குக் காரணம் இதற்கு முன்னே ஓர் இரவில் சிவராமகிருஷ்ணன் இறைவனால் பயமுறுத்தப்பட்டிருக்கிறார்.

சதாசிவ பிரும்மத்திற்கு, சிவராமகிருஷ்ணனாக இருந்த பொழுது ஒன்பது வயது.

ஒரு நாள் ஒன்பது வயதுச் சிறுவன் வைகையாற்றங் கரை ஓரமாக நின்றிருந்தான். ஏழு வயதுச் சிறிய பெண் குழந்தை வடிவில் மதுரை மீனாட்சியைப் போன்று சிவராமகிருஷ்ணனிடம் வந்து நின்றாள். இவர் வாழும் அதே தெருவில் மூன்றாவது வீட்டுப் பெண் அவள் என்பது இவருக்குத் தெரியும்.

"சிவராமகிருஷ்ணா, எங்கள் வீட்டிலே பூஜை நடக்கிறது. அம்மா சீக்கிரமாக ஆற்றில் குளித்து விட்டு வீட்டிற்கு வரச்சொன்னாள். அப்பா அன்பாக எனக்கு வாங்கிப்போட்ட சிவப்புக்கல் மூக்குத்தி ஆற்றிலே குளிக்கும்போது தொலைந்துவிடும்.

கரையிலே நீ இதை வைத்துக்கொள். குளித்துவிட்டு வருகிறேன், வந்து வாங்கிப் போட்டுக் கொள்கிறேன்" என்றாள்.

சிவப்புக்கல் மூக்குத்தியும் கையுமாக சிவராமகிருஷ்ணன் என்ற பிரும்மேந்திரர் கரையிலே நிற்க, சிறுமி ஆற்றிலே மூழ்கி நிரந்தரமாய் மறைந்தாள்.

ஊர் கூடியது. சிவராமகிருஷ்ணன் மூக்குத்தியுடன் திணறினான்.



# 18

# வைகையில் இறங்கிய சித்திராங்கி

மதுரை மீனாட்சியின் திருமணத்திற்காக திருமால் என்ற அழகர் கல்யாணத்திற்கு வருகிறார். வைகையாறு வற்றிக் கிடந்தது.

அழகர் சீர்வரிசைகளுடன் ஆற்றங்கரையைக் கடக்க இறங்குகிறார். திடீரென்று ஆற்றில் வெள்ளம் வந்து விடுகிறது. அழகர், கரையிலேயே வெள்ளம் வடியக் காத்து நிற்கிறார்.

அதற்குள் மதுரையில் சோமசுந்தரக் கடவுளுக்கும், மீனாட்சிக்கும் குறித்த லக்னத்தில் திருமணம் முடிந்து விடுகிறது.

மதுரையிலிருந்து செய்தியறிந்த கள்ளழகர் கோபித்துக்கொண்டு திருமாலிருஞ்சோலைக்கு திரும்பி விடுகிறார்.

ஆற்றில் இறங்கிய சின்னப் பெண் சித்திராங்கி பிரும்மேந்திரரின் தெருவில் வாழும் மூன்றாவது வீட்டுப் பெண் என்பது சிவராமகிருஷ்ணனுக்கு மறந்துவிட்டது.

தேவி மீனாட்சி நமக்குந் தெரிந்த பெண் குழந்தையின் உருவில் வந்து, ''சிவராமகிருஷ்ணா, நீ என்னைப் போன்ற பெண்ணை மணந்து வாழ்க்கைச் சுழலில் இறங்கி விடாதே.

இறைவியாகிய என்னை விரும்பி ஞானப் பேராறு என்ற வைகையில் இறங்கிவிடு.

என் நினைவாக என் மூக்குத்தியைக் கையிலே வைத்துக் கொண்டு என்னையே நினை. என் நகையாகிய

மூக்குத்தி உன்னிடம் இருக்க, என் நகைக்காக நான் உன்னிடம் வரத்தான் வேண்டும்'' என்று கூறுவதுபோல் அந்தத் தருணத்திலும் அந்தச் சிறுவன் நினைத்தான். தேவியும், புராணமும் நினைவில் வந்தது.

மெய்ம்மறந்தான்; பக்கத்து வீட்டுப் பெண் ஆற்றில் உயிரிழந்தது நினைவில் இல்லை.

பயமில்லாது வாழ்தல் வெற்றிக்கு அறிகுறி. சிவராம கிருஷ்ணன் நாகலட்சுமியைத் திருமணம் செய்துகொண்டு அவள் பூப்பு எய்தியதும் தான் ஞானியாகி விடுவோமென்பது அப்போது அச்சிறுவனுக்குத் தெரியவில்லை.

ஆனால் கையில் மூக்குத்தியுடன் மதுரையில் மீனாட்சியை நினைத்தவுடன் பயம் போய்விட்டது.

பிற்காலத்தில் சதாசிவ பிரும்மேந்திரர் தெளிவு என்பது ஞானம் என்றதைத் தெரிந்துகொண்டதைப் போன்று 'பயமின்மை' என்பதும் ஞானம் என்று தெரிந்து கொண்டார்.

வைகையில் ஊர் கூடியது. சிவராமகிருஷ்ணனைத் தாய் தந்தையர் நையப் புடைத்தனர்.

ஆற்றிலே இறங்கிய சித்திராங்கி தன் வீட்டுத் திண்ணையில் செங்கல்லிலே எழுதி வைத்திருந்தாள். ''போன வெள்ளிக்கிழமை நானும் அவனும் விளையாடும்போது உன்னை நான் கட்டாயம் கல்யாணம் செய்துகொள்ள மாட்டேன். நீ இப்பொழுதே பாண்டி ஆட்டத்தில் அழுகுணி ஆட்டம் ஆடுகிறாய். அழுகுணியைக் கட்டிக்கொண்டால் நானும் அழுகுணி ஆவேன்'' என்பது அது.

இறந்த பெண், மூக்குத்தி, செங்கல் எழுத்து இவை சிவராமகிருஷ்ணனைப் பயமுறுத்தின.

சிறிது நாள் அவன் பிரமை பிடித்தவனானான். இதனால் தாய் தந்தையர் ஊர் பேச்சைக் கேட்டு பெண் ஏக்கம் என்றனர்.

முடிவு ; சிறுவனின் ஒன்பது வயது அதிர்ச்சிக்கு பதினோருவது வயதில் பேற்றோர்கள் நாகலட்சுமியை பால்யத் திருமணம் செய்து வைத்து விட்டனர்.

நாகலட்சுமியை எண்ணும்போதெல்லாம் சிவராம கிருஷ்ணன் என்ற பிரும்மேந்திரரின் கண்களில் ஆற்றில் இறங்கிய சித்திராங்கியே பயமுறுத்துவாள்.

நாகலட்சுமியின் திருமணம் நடந்து கால வெள்ளம் காலத்தைத் தள்ளியது. மனைவி காலத்தை முந்திக் கொண்டு பருவமடைந்தாள்.

அந்த விழாவிற்கு மாணவன் சிவராமகிருஷ்ணன் திருவிசைநல்லூரிலிருந்து மதுரைக்கு வருகிறார்.

வீட்டில் அன்று மனைவி நாகம் கணவன் மீது மாமியாரிடம் கோள் மூட்டுகிறாள். இறைவனுக்குப் படைக்க வேண்டிய பலகாரத்தை அதைப் படைக்கு முன்பே இவர் தின்றுவிடுகிறார்.

இதுவே ஞானி அன்று செய்த தவறு. மனைவி சொன்ன கோள், இதனால் தாயிடம் இவர் கடினமான சொற்களைப் பெறுகிறார்.

இச்சம்பவமே மதுரை சிவராமகிருஷ்ணனை நெரூர் சதாசிவ பிரும்மம் ஆக்கியது.

கோபம் கொண்ட சிவராமகிருஷ்ணனுக்கு, மனைவி நாகலட்சுமி மதுரையாற்றில் அன்று மூழ்கிய சித்திராங்கியாகத் தெரிகிறாள்.

முதலில் பயந்தார். பிறகு பயமின்மை என்பது ஞானம் என்று தெளிந்து வீட்டை விட்டு வெளியேறுகிறார் பிரும்மேந்திரர்.

இதை ஞானி மணலில் எழுதிக் காட்ட மக்கள் ஞானியை உணருகின்றனர்.



19

# ஆகாயப் படுக்கை

பூமி என்ற நிலம், ஒரு ஞானியின் உடம்பு; கடல் அவனது திருவுள்ளத்தில் அலைமோதுகின்ற ஞானம். கடல் கட்டுப்பட்டு நிற்பதைப் போன்று ஞானி சதாசிவ பிரும்மம், குரு பரமசிவேந்திர ஆசாரியனுக்குக் கட்டுப் பட்டு, மௌனியாக நெரூரில் ஜீவசமாதி ஆகும்வரை இப்பூவுலகில் நடமாடி வந்தார்.

ஒரு சமயம் ஞானி ஓர் மரத்தடியில் அமருகிறார். அதே நிழலில் ஒரு உழைப்பாளி தலைவைத்துப் படுக்க முயலுகிறான்.

பிரும்மேந்திரர், அவனது தலைப்புறப் பக்கமாக அமர்ந்து மனத்தினுள்ளே ''சிவ சிவ'' என முணுமுணுக் கிறார்.

தலைவைத்துப் படுத்த உழைப்பாளி கோபமுடன் எழுந்து ஞானியைப் பார்த்து, ''பல கவலைகளில் வீட்டில் தலைவைத்துப் படுக்க இடமில்லாமல் வந்தேன். நீ வேறு, மரத்தடியில் ''சிவ சிவ'' என முணுமுணுக்கிறாயே'' என்கிறான்.

திடீரென உழைப்பாளியின் உடல் வியர்த்தது. மரத்தின் எதிரே ஒரு சிவன் கோயில் பாழடைந்து திறந்து கிடந்தது. அங்கு உள்ள சிவபெருமானின் தலையில் ஆகா யத்திலிருந்து கொத்துக் கொத்தாக மல்லிகைப் பூக்கள் கொட்டின.

ஞானியின் வாயும் முணுமுணுத்தது. இரண்டையும் பார்த்த கிராமத்தான் ஞானியை வணங்கி பிரும்மேந்திரர் ஞானசித்தர் என்பதை உணர்ந்தான்.

ஞானி அவனுக்கு மண்ணில் விரலால் எழுதிக் காட்டி னார்: ''நான் தலைவைத்துப் படுக்கிறேன்; நீயும் படு; எனக்கு ஆகாயப் படுக்கை, உனக்கு மண் படுக்கை''.

பூமியில் அமர்ந்திருந்த சதாசிவ பிரும்மம், திடீரென்று ஆகாயத்தில் படுத்து மிதந்தார். மிதந்து கொண்டே சிவனைப்பற்றி முணுமுணுத்தார் ஞானி.

அருள் பெற்ற பாமரன், அதை மனத்தில் வாங்கித் தொடர்ந்து பூமியில் எழுதினன். ஞானி சென்ற பின்னும் பல நாள் அங்கேயே இருந்து அதைப் பாதுகாத்தான்.

பின்பு அந்தப் பக்கமாக வந்த ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள், அந்தப் பாமரனின் மூலம் ஞானி எழுதிய சிவ வழிபாட்டை ஓலையில் எழுதிக்கொள்கிறார்.

இதுதான் மௌனியான பின் பிரும்மேந்திரர் படைத்த சிவ மானஸிக பூஜா என்ற நூல்.

இந்த ஞானச் சித்தரைப் பார்த்தவர் பலர்.

## 20

## தலையில் தீ வைத்த திகம்பரன்

பிரும்ம ஞானியான சதாசிவ பிரும்மம் தமிழகத்து எல்லையைக் கடந்து கேரள தேசத்திற்குள் சஞ்சரிக்கத் துவங்கினார்.

ஞானிகள் திருக்குற்றாலம் சென்றார். குற்றாலநாதரை தரிசனம் செய்து கொண்டு வெளியேறும் முன், கோயிலின் முன்னுள்ள ஈரத்தரையில் கீழ்க்கண்டபடி சில வாசகங்களை பொது மக்களுக்கு எழுதிக் காட்டினார் :

"குற்றாலத்தில் சிவபெருமான் தனது ஒரு கையில் நெருப்பு என்ற தீயைச் சுமக்கிறான். அவனை வழிபடும் சதாசிவ பிரும்மம் இன்னும் சிறிது நேரத்தில் தன் தலையிலே ஞானத் தீயைச் சுமந்து, அதை உண்மையான நெருப்பாகவே தலையில் சுமந்து காட்டப் போகிறான்.

யாராவது என் தலையில் தீயைப் பார்க்க வேண்டுமானால் என பின்னே வாருங்கள். என் தலையில் யாரும்

தீ வைக்க முடியாது; எனக்கு நான்தான் தீ வைத்துக் கொள்ள முடியும்.''

ஞானிகள் உடம்போடு நெருரில் மறைந்து ஜீவசமாதி யானவர். யாரும் இவருக்கு தீ வைக்க முடியவில்லே. இவரது கருத்தைப் பின்னே சிலர் உணர்ந்தார்கள் என்பது உண்மை.

குற்ருலத்தில் கேரள மாந்திரீகன் ஒருவன் ஈரமண் எழுத்துக்களைப் படித்தான். இவரைச் சோதிக்கப் பின் தொடர்ந்தான். தன அடியாட்களிடம் சொல்லித் தேக்கடிக்கு அருகே துன்புறுத்தச் சொன்னன்.

ஞானி காட்டு வழியே நடக்கிருர். மாந்திரீகனின் ஆட்கள் இரவில் ஞானியை விறகு வெட்டிகள் போன்று சந்தித்து, மிகப் பெரிய விறகுச் சுமையை சுமக்கச் செய்கின்றனர். ஞானிகள் சுமையை பஞ்சு மூட்டை போன்று தலேயில் ஏற்றிக் கொள்கிருர்.

மாந்திரீகனின் ஆட்கள் விறகுக் கட்டையால் அடிக்கின்றனர். மௌனியான சதாசிவம், குற்ருல நாதனின் கையில் உள்ள நெருப்பை சிந்திக்கிருர். ஞானியின் தலேயிலுள்ள விறதுச் சுமை 'திகு திகு' வென எரிய அவர் கேரள விஜயம் செய்கிருர்.

மாந்திரீகன், ''தலேயில் தீ வைத்த திகம்பரன்'' என்று அலறுகிருன். அடித்த ஆட்களின் கைகள் ஓங்கிய படி அப்படியே நின்றன. அவர்கள் ஓட, ஞானி நடக்க ஞானம் நடந்தது.

பிரும்ம ஞானியான சதாசிவ பிரும்மேந்திரர் ஒரு ஞானி, யோகி, சித்தரும் கூட. சமயத்துறையில் சொல்லப் பட்டுள்ள பூரணம் என்ற முழுமையைப் போன பிறவியிலேயே அடைந்து, இறைவன் உருவமுடன் இருக்கிருன் என்பதையும், மனிதனே, ஞானத்துடன் விளங்கினுல் இறைவன் என்ற முழுமையையும், பகவான் புத்தனின் நிர்வாணம் என்ற முழுமையையும், மஹாநிர்வாணம்

என்ற முழுமையில் முழுமை என்ற நிலையினை போன பிறப்பிற்கு முற்பிறப்பில் ஒரு நிலையில் அடைந்திருந்த ஞானி இவர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஞானி போன பிறவியில் பேசிக் கொண்டிருந்தபோது ஒரு சமயம் கும்பகோணத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தார். திடீரென்று சாரங்கபாணி கோயிலில் புளியோதரை இனமாய் விநியோகிக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு அங்கே சென்று பட்டை சோறு வாங்கி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

குறுக்கே ஒரு பெருச்சாளி ஓடி வந்து இவரைப் பார்த்து முறைத்து நின்றது. ஞானிகளும் அதை முறைத்துப் பார்த்தார், எலியை முறைத்துப் பார்த்தவுடன் பிரும்மேந்திரருக்கு போன பிறவிக்கு முன்னே உள்ள பல பிறவிகள் பளிச்சென்று தெரிந்தது.

ஞானிகள் எலியைப் பார்த்து, ''கும்பகோணம் எனக்குப் புளித்து விட்டது; உனக்கு நன்றாக இருந்தால் இந்தப் புளியோதரையைச் சாப்பிடு; நான் உன்னைப் பார்த்தவுடன் பல ஜன்ம பூர்வ வாசனைகளைத் தெரிந்து கொண்டேன். எலியே நீ எனது குரு. உன்னைப் பார்த்துக் கொண்டே இருக்கும்பொழுது நான் இங்கிருந்தே கங்கைக் கரையைத் தரிசிக்கிறேன். பல பிறவிகளுக்கு முன்னே பாரதம் முழுவதும் நடந்தே மௌனமாக எல்லாப் பொருள்களையும் பார்த்தே ஞானம் கொண்ட தத்தாத்ரேயர் நானே என்பதைப் பார்க்கிறேன்.

கங்கைக் கரை எலிகளைக் கண்டு ஒரு பொருளை மனத்தில் வாங்கி பகவான் புத்தனைச் சந்திக்க அவனது ஆசிரமத்திற்கு நடந்து சென்றதை இருங்கிருந்தே பார்க்கிறேன். கங்கைக் கரை எலிகளைப் பார்க்கப் போகிறேன்'' என்று ஞானி ஆகாய மார்க்கத்தில் மறைந்தார்.



21

# கங்கை எலியுடன் சதாசிவம்

நெரூர் சதாசிவ பிரும்மம் போன பிறவியில் கும்ப கோணத்திலிருந்து கங்கைக் கரை போய்ச் சேர்ந்தார். பிரும்மா, விஷ்ணு, சிவன் இவர்கள் மூவரும் ஒன்ருக இணைந்து திருமூர்த்தி என்ற உருவைக் கொண்டனர்.

பிறகு உலகுக்குப் பேருண்மைகளை உபதேசிக்க ஒரு தாயின் வயிற்றில் மனிதனுகப் பிறந்து ஒரே உருவைக் கொண்டனர். அந்த மனிதப் பிறவிக்கு ஸ்ரீதத்தன் அல்லது தத்தாத்ரேயர் எனப் பெயர் வந்தது.

தத்தனின் தந்தைக்கும், தாய்க்கும் தத்தன் பிறந்ததும் பைத்தியம் பிடித்து விட்டது. தாய் தன்னை எலி என்ருள் கணவனிடம், கணவன் மனைவியினிடம் தன்னைப் பூனை என்ருன்.

கங்கைக் கரையில், பூனையாகிய நான் எலியாகிய உன்னை குதறிச் சாப்பிடப் போகிறேன் என்ருன் தத்தனின் தகப்பன். நான் எலிதான், என் மகனை தத்தனைத் தொட்டால் எனக்கு உடனே ஞானம் வருகிறது. அதனுல் மனைவிதான் கணவனுக்குக் குரு என்ருள் மனைவி கணவனிடம்.

கணவன் வெகுண்டு எழுந்தான். இது ஆண்களுக்கு அவமானம். அதனுல் பூனையாகிய நான், போட்ட குட்டியாகிய எனது மகன் ஸ்ரீதத்தனை சாப்பிடப் போகிறேன் என்று கங்கையில் அலறினுன் தகப்பன்.

வடமொழியில் 'தத்தம்' என்ருல் தானம் என்று பொருள். தாயார் குழந்தையைக் காப்பாற்ற எண்ணிஞள். குழந்தைக்கு தத்தன், ஆத்ரேயன் என பெயரிட்டாள்.

கங்கையே என் மகனைக் காப்பாற்று என்று, குழந்தையைத் தாய் கங்கை நீரில் தள்ளினுள். அந்த

கங்கையில் பிழைத்த தத்தாத்ரேயரே சதாசிவ பிரும் மேந்திரரின் முதற் பிறவியாகும். அப்பொழுதே நாடெல் லாம் நடந்து குரு இல்லாமலேயே ஞானியாக விளங்கிய வர். இவரே போன பிறவியில் நெரூரில் ஜீவசமாதி கொண்ட சதாசிவம். ஆதியில் கங்கையில் தத்தாத்ரேயர். இவருக்கு அப்போது மிருகங்கள், பறவைகள், உயிரற்ற ஜடங்கள் எல்லாம் குருவாக விளங்கின. முப்பத்துமூன்று குருமார்கள் என்று கொள்ளலாம்.

இவர் நேரடியாக கௌதம புத்தரைச் சந்தித்து அங்கும் மிக அதிகமாகப் படித்தவர். கும்பகோண சண்டி பண்டிதர்களுக்காக கங்கை வந்த சதாசிவம், எலியில் தன் தாயையும், பூனையில் தன் தகப்பனையும் தரிசித்தார்.

எலி பிடித்த பூனையை அங்கே கண்டு குருவாக ஏற்றார்.



## 22

## காலித்தேங்காய்

தேங்காய் என்றாலே உள்ளே ஓட்டிற்குள் ஏதாவது இருக்கும். வண்டு தேங்காயின் மீது தேரை அமர்ந்தால் அந்தத் தேங்காயின் உள்ளே பருப்பே இருக்காது. இதற்குக் காலித்தேங்காய், அல்லது தேரை அடித்த காய் என்று பெயர்.

"மனிதா, நீ சிந்திக்காமல், புத்தியை உபயோகப் படுத்தாமல் வாழ்ந்தால், நீ வாழுகின்ற காலித்தேங்காய்" என்று கௌதம புத்தர் என்ற புத்த பகவான் இந்த நாட்டில், 2,500 ஆண்டுளுக்கு முன் பிரசாரத்தைச் செய்து வந்தார்.

மக்கள் வெள்ளம் அவர் பக்கம் திரும்பி புத்தனுக்கு ஆசியாவின் ஜோதி என்று பெயர் வந்தது, சிந்திக்கும் மக்களைத் தவிர சமயவாதிகள் அனைவரும் புத்தனை எதிர்த்தனர்.

ஞானிகளில் ஒருவரான நெரூர் சதாசிவ பிரும்மம் இறைவனைக் கண்டபின்னும் புத்தனை பகவான் என்று சொல்லி, 18-ஆம் நூற்றுண்டிலேயே ஏற்ருர். புத்தனையும் சேர்த்து ஞானப் பிரசாரம் செய்தார். இதனுல் இவரை அக்கால சமயவாதிகள் இவரது குருவின் மூலம் மௌனி யாக்கினர்.

ஞானியான சதாசிவ பிரும்மம், புத்தன் வாழ்ந்த காலத்தில் தனது முதற் பிறவியில் கங்கைக் கரையில் ஸ்ரீதத்தன் என்ற தத்தாத்ரேயராக வாழ்ந்ததே ஞானியின் இந்த எழுச்சிக்குக் காரணம்.

ஸ்ரீதத்தன் என்ற ஞானி கங்கைக் கரையில் தவம் கிடக்கும்பொழுது அவரது காதுகளில் எங்கோ புத்த பகவான் பிரசாரம் செய்யும் மொழிகள் விழுகின்றன. ஞானி, காலித் தேங்காய் என்ற மொழி கேட்டு தவம் கலைகிருர். கண் எதிரே இரண்டு காலித் தேங்காய் மூடிகள் கிடக்கின்றன.

தன் மூளை, காலியோ என்று அச்சம் வருகிறது. காலித் தேங்காய் மூடிகளை தனது குருவாக ஏற்று அவைகளைக் கையில் எடுத்துக்கொள்கிருர்.

நேராக நடந்து தத்தாத்ரேயர் என்ற சதாசிவ பிரும்மம் காசி விஸ்வநாதரை வணங்குகிருர். இறைவனிடம் விடைபெற்று, தேங்காய் மூடிகளுடன் புத்தனைப் பார்க்க நடக்கிருர்.

ஆதியில் உடையில்லாமல் திரிந்த பிரும்மஞானி ஸ்ரீதத்தாத்ரேயர், சென்ற 18ஆம் நூற்றுண்டில் வாழ்ந்து ஜீவ சமாதியடைந்த ஞானி நெரூர் சதாசிவ பிரும்மமே.

ஆதியில் அவதூதரான தத்தாத்ரேயர் கங்கை நதிக் கரையில் இளமையிலேயே, யாருமின்றி தன்னந்தனியராகவே வாழ்ந்தவர். உறவில்லை, ஊரில்லை, சொல்லிக் கொடுக்க ஆசிரியர் என்ற குரு இல்லை, என்பதனுல் இவரும் பேசியதே இல்லை. கடைசி வரை மௌனியாகவே இருந்த இவர் தானுய் வளர்ந்தவர்-விளங்கியவர்.

கண்ணால் பார்த்துப் படித்த ஆதியில் விளங்கிய மௌன குருவும் இவரே.

இவர் கௌதம புத்தரின் ஆஸ்ரமத்தில் தன்னை மாணவராக்கிக் கொள்கிறார்.

சதாசிவ பிரும்மத்தைப் பொறுத்தவரை புத்தர் ஒரு ஞானியே. ஆனால் புத்தர், தன்னை புத்தியுள்ளவன் என்று அழைத்தால் போதும்; ஞானி என்ற பட்டத்தைக் கொடுத்து தான் ஆராய்ந்து கொண்டிருக்கும் எந்தப் பொருளுக்கும் பரம்பொருள் என்ற பெயரை இட்டுத் தன் சிந்தனையை முடிவுக்குக் கொண்டு வராதீர்கள்; சிந்தனையாளர்களின் கூட்டத்திற்கு சமயம், மதம் எனப் பெயரிட்டு சிந்தனையை அழிக்காதீர்கள் என்று சீடர்களுக்குத் தீவிர கட்டளையிட்டிருந்தார்.

இதை அறிந்திருந்தார் கடவுள். அதனால் இறைவன் தன் சுய உருவை மறைத்துக்கொண்டு ஸ்ரீதத்தன் என்ற மௌனியாக, மாணவனாகவே புத்தரிடம் பெரும் பாடம் படிக்கிறார்.

ஸ்ரீதத்தன் ஓலைகளில் கேள்வியையும், பதிலையும் எழுதிக் காட்டித்தான் புத்தனிடம் படிப்பான்.

## 23

# ஜீவசமாதி

இவரே 18-ஆம் நூற்றாண்டில் சதாசிவ பிரும்மமாக மதுரையில் தோன்றி ஆரூரில் பலரின் காழ்ப்புணர்ச்சியால் காஞ்சி சங்கரரால் மௌனியாகி திண்டிவனம் அருகே வெட்டுண்ட கை மீண்டும் ஒட்டிக் கொண்டு சித்து விளையாடி, கடைசியில் புத்தனையும், தன்னையும் உலகுக்கு உணர்த்த முடியாததால் வைகாசி மாதம் தசமி திதியன்று நெரூரில் ஜீவசமாதி என்றபடி உயிருடன் இறைவனுடன் கலக்கின்றார்.

மக்கள் வெள்ளம் சமாதிக்குச் சென்று அஞ்சலி செலுத்துகின்றது. இதை அறிகிறார் இவருக்கு மௌனம் கொடுத்த காஞ்சி பரமசிவேந்திர ஆசாரிய குரு.

மகனைப் பிரிந்த தகப்பன், தன் மாணாக்கனைப் பிரிந்த ஆசிரியன் இவர்களைப் போல் குரு கண் கலங்குகிறார். ஆந்திரப் பிரதேசக் காடுகளின் வழியே நெரூர் சமாதிக்கு பரமசிவேந்திரர் பயணப்படுகிறார்.

இடையில் கானகத்தில் கோயிலுமில்லை, மடமுமில்லை தனியான புளிய மரத்தில் ஒரு ஆலய மணி தொங்குகிறது. அங்கே சீடன் சதாசிவத்தின் குரல் கேட்டு குரு அங்கேயே மௌனியாய் தவம் கிடக்கலானார்.

பெரும் திரளான பொதுமக்களின் முன்னிலையில் ஞானி சதாசிவ பிரும்மம், தாயுமான அடிகளால் குறிப்பிடப்பட்ட மௌன குரு, நெரூர் காவிரியாற்றங் கரையில் ஜீவசமாதி கொள்கிறார். பல உண்மையாளர்கள், கண் கலங்குகின்றனர். பேசி உலகுக்கு வழிகாட்ட வேண்டிய உயிர், மௌன நிலையில் கடைசிக் காலம் வரையில் சிலரின் சுயநலத்தினால் உயிரற்ற ஓவியமாய் மறைந்தது என்றும் ஊர் பேசியது.

ஜீவனுடன் சமாதி அடைந்த ஜீவசமாதி என்பதால் மீண்டும் உலகில் தோன்றி பணி செய்ய விரும்புகின்றனர் ஞானிகள். அதனால் ஞானி, சமாதி அடைந்த சில நாட்களுள், நெரூர் சமாதியில் வில்வமரமாய் உயிர் பெற்றுத் திடீரென பெரிய மரமாய் வளர்ந்து விடுகிறார்.

அன்று 18-ஆம் நூற்றாண்டில் வில்வமரமாய் உயிர் பெற்ற ஞானிகள், 20-ஆம் நூற்றாண்டில் இன்று, உயிர் பெற்றவரை நெரூர் என்ற அங்கும் எங்கும் ஜீவசமாதியில் விளங்கியவரே,

ஞானிகள் சமாதியடையும் முன் மண்ணில் எழுதிக் காட்டியது இதுவே :

"நான் ஜீவசமாதியடைந்து வில்வமரமாம், உடனே தோன்றுவேன். நெரூர் நான் மீண்டும் பிறக்கும் வரை ஜீவனுடனேயே விளங்கும். 20ஆம் நூற்றுண்டில் மீண்டும் பூரண பிரும்ம ஞானியாய் அவதரிப்பேன் பிறகு நெருச்சி கோலாகலமாய் விளங்கும். இருபதில் பகவான் புத்தன் என்னுடன் உலகில் பவனி வருவான். நான் சமாதி யடைந்த ஒன்பதாம் நாளில் காசியிலிருந்து ஒருவர் ஒரு லிங்கத்தை எனது சமாதியில் வைத்துவிட்டுச் செல்வார். புதுக்கோட்டை மன்னர் பரம்பரைக்கு நான் ஆன்ம நண்பர்.

எனது குரு பரமசிவேந்திரர் இப்பொழுதும் என்னை சீடனுகவும், மகனுகவும் எண்ணுகிருர். அவர் ஜீவசமாதிக்கு வந்தபின் அன்பினுல் துக்கத்தில் ஆழ்வார். செய்வது அறியாது, ஒரு அந்தணனை வைத்து, துறந்த ஞானியாகிய எனக்கு அவரே பத்து நாட்கள் ஈமக்கிரியைகள் செய்வார். அதனுல்தான் குருவின் ஆணைக்கு, மறைந்த பின்னும் கட்டுப்பட்டு ஒன்பதாவது நாளன்றே காசியிலிருந்து லிங்கத்தை அனுப்பி வைக்கிறேன்.

இதனுலும், ஈமக்கிரியை செய்ததனுலும், ஞானியாகிய நான் மீண்டும் பிறக்கிறேன்.

இன்னமும் சிறிது நேரத்தில் எனது சஹா ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் எனது சமாதியில் ஓலைகளை எரிப்பான்."

தண்டகாரண்யம் காட்டுப் பகுதிகளின் வழியாக, பிரும்மேந்திரரின் குரு பரமசிவேந்திரர் பாதயாத்திரையாகப் புறப்பட்டு, சீடன் பிரும்மேந்திரர் ஜீவசமாதியடைந்த நெரூர் வந்தடைகிருர்.

குருநாதரின் கண்கள் ஆருத்துயருடன் சீடனின், உயர்நிலையை எண்ணி ஆனந்தக் கண்ணீரைப் பெருக்குகிறது. சீடனை மகனுக எண்ணிப் பதின்மூன்று நாள் ஈமக்கடன்களை நெரூரில் செய்து முடிக்கிருர்.

காசியிலிருந்து ஒன்பதாவது நாள் ஒரு பாணலிங்கம் நெரூருக்கு வருகிறது. குருநாதனே அதைப் புதுக் கோட்டை மன்னன் குடும்பத்தின் முன் சமாதியில் பிரதிஷ்டை என்ற உயிர் கொடுக்கிறார். பதின்மூன்றாவது நாள் ஊர் மக்களின் முன் பாணலிங்கத்தின் பின்னே ஒரு வில்வ மரம் காட்சி தருகிறது.

ஞானிகள், அசரீரியாகப் பலரின் காதுகளில் மொழி கிறார்: ''நான் ஜீவனுடன் வில்வ மரமானேன். அதனடி யில் எனது ஆசாரியன் ஒரு மண் லிங்கத்தை செய்து வைப்பார்.

மண் லிங்கம் எனது தேகமென்ற உடல். எனது ஜீவசமாதி வில்வ மரம். எனது ஆன்மா என்ற சூட்சும சரீரம் பாலஸ்தீனத்தில் வாழும்.

நான் மீண்டும் பூவுலகிற்குத் திரும்புவேன். பிரசாரம் செய்வேன். எனது குருநாதர் சில மாதங்களில் திருவெண் காடு என்ற ஊரில் சமாதி கொள்வார். அங்கு நானும், அவரும் இரண்டு வில்வமரமாக விளங்குவோம்.''

ஊர் மகிழ்ந்தது.

பரமசிவேந்திரர் நெரூர் சமாதியில் மண்ணில், சாஸனமொன்றை எழுதிவிட்டு திருவெண்காடு என்ற தலம் சென்று ஒரு மண்டலம் உண்ணாவிரதம் இருந்து சமாதி அடைகிறார்.

இதன்பின் ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் என்ற போதேந்திர ஸ்வாமிகள் நண்பனின் ஜீவசமாதிக்கு வருகிறார். இவர், பண்டிதர்கள் பிரும்மேந்திரருக்கு இழைத்த கொடுமைகளை ஓலைகளில் எழுதிவைத்திருந்தார்.

அதை நெரூர் சமாதியில் எரிக்கிறார். பின்பு அங்கி ருந்து திருவாவடுதுறை சென்று பல நாட்கள் மௌனி யாகத் திரிகிறார். பின்பு அந்த ஊருக்கு அருகாமையி லுள்ள கோவிந்தபுரம் என்ற ஊரில் போதேந்திரரும் சமாதி அடைகிறார்.

24

# குரு செய்த சாஸனம்

நெரூரில் பிரும்ம ஞானியான சதாசிவ பிரும்மம் ஜீவசமாதி கொண்டார். குருவான காஞ்சி சங்கரர் பரம சிவேந்திரர், சமாதியின் முன்னே ஈரமான தரையில் சீடன் பிரும்மேந்திரனுக்குச் சில விஷயங்களை பெரிய எழுத்துக் களில் எழுதி வைத்திருந்தார்.

அதை பொதுமக்கள் சாரி சாரியாகப் படித்துச் சென்றனர். குருவின் கையெழுத்தில் கீழ்க்கண்ட வாசகங் கள் இருந்தன:

''காலமெல்லாம், அடங்காத சீடனாய் வாழ்ந்த பிரும் மேந்திரா! என்னைப் பார்ப்பதற்கு முன்னமேயே மண்ணில் ஜீவனுடன் அடங்கிவிட்டாய். நான் உன்னைப் பண்டிதர் களின் தூண்டுதலால், திருவாரூரில் மௌனியாக இரு என்றேன். அதை இறைவனின் ஆணையாய் எடுத்துக் கொண்டு கடைசி நிமிடம்வரை மௌனத்திலேயே அடங்கிவிட்டாய்.

''தக்ஷிணாமூர்த்தியை உன்னுள் கண்டேன். பூரணம் அடைந்த பிரும்ம ஞானியாகிய நீ ஜீவசமாதியில் இருந்த படியே மீண்டும் என் வாக்கிற்குக் கட்டுப்படு.

''நான் திருவெண்காட்டில் சமாதியடைவேன். அப் பொழுது நீ மீண்டும் அவதாரம் செய்ய வேண்டும் என்று எண்ணி மறைவேன். என் நினைவை உன் நினைவாக்கிக் கொண்டு மீண்டும் 20-ஆம் நூற்றாண்டில் பூரண பிரும்ம ஞானியாய்ப் பிற.

''தோன்றியதும் ஞான மார்க்கத்தை உலகெங்கும் பரப்பு. புத்தனையும் இறை உணர்வுக்காக பிரசாரம் செய். பிரும்ம ஞானியாகவே இரு. ஆஸ்ரமங்கள் எதுவும் கொள்ளாதே. மடங்கள் அமைக்காதே, அதன் தலைவனும் ஆகாதே. மக்களுடன் மக்களாய் ஞானியாய் இரு. உனக் குச் சீடர்களே வேண்டாம். தானாக உருவாகட்டும்.

"ஜாதி மத பேதங்களைக் கடந்து, சமய உணர்வுகளைக் கடந்து, மக்களுக்கு இறை உணர்வு ஒன்றே உண்மை என்று சொல்.

"என் ஆன்ம சாந்திக்காக உலகெங்கிலும் மேதா தக்ஷிணாமூர்த்தி, மேதா பாண்டுரங்கன், பகவான் புத்தன் இவர்களுக்குக் கோயில் அமை.

"இந்தச் சொல்லுக்கு நீ கட்டுப்பட மாட்டாய் என்று எனக்கு எழுதும்போதே தெரியும். காரணம், நீ ஞானத்துள் கட்டுப்பட்டவன்.

"கோயில் அமைக்காவிட்டாலும் மக்களின் உள்ளக் கோயிலில் இவர்களைப் பிரதிஷ்டை செய்.

"நாகலட்சுமியைக் கண்டால் குருப்பிரஸாதம் என்று சொல்லி, அவளுக்கு முக்தி மார்க்கத்தைக் காண்பி.

"ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாளானை போதேந்திரன் கடைசிவரை உன்னிடமும், என்னிடமும் நடந்தவன். குருவான எனக்கு, நீங்கள் இரண்டு பேரும் இரண்டு கண்கள்.

"நீ இறைவனின் பாதம் வந்து அடையும்வரை குருப் பிரஸாதம் என்று சொல்லி, அவனையும் பார்த்துக்கொள்."

நாராயணஸ்ம்ருதி

## 25

# காமன் பண்டிகை

சில ஜில்லாக்களில், மன்மதனை வழிபட்டு ஒரு விழா எடுப்பார்கள். இதற்குக் காமன் பண்டிகை என்று பெயர்.

தவத்தில் ஆழ்ந்த சிவபெருமானின், கயிலைக்குள் கரும்பு வில்லுடன் மன்மதனை தேவர்கள் நுழையச் செய்தார்கள். நீண்ட நெடுங்காலம் காமேஸ்வரனான, சிவ பெருமான் தவயோகத்தில் ஆழ்ந்ததால், உலகில் பிறப்பு

கள் குறைந்தன. மனிதர்களில் பலர், துறவறம் பூண்டனர். பிரஜைகளின் உற்பத்தி குறைந்தது. இதைத் தடுக்க, பரமன் காமுகரூலுல் உலகமும் விருத்தியாகும். அதற்கு மன்மதனை அனுப்பி சிவகாமத்தைத் தூண்டச் செய்தனர்.

சிவபெருமானின் முன் மன்மதன் காம பாணங்களை எய்தான். ஞானமூர்த்தியான சிவன் நெற்றிக் கண்ணைத் திறக்க...... மன்மதன் எரிந்து சாம்பலானான். அந்தத் திருநீற்றை சிவபெருமான் நெற்றியில் அணிந்தார்-

மனைவி ரதி கயிலைக்கு ஓடிவந்து, மன்மதனுக்காக, அழுதாள். சிவன் அருள் பாலித்து...... மனைவியான ரதியின் கண்களுக்கு மாத்திரம் மன்மதன் தெரிவான் என்று அருள் செய்தார். இதனால் காமம், கண்ணுக்குத் தெரியாத கொடிய அனலாக அது முதல் எல்லா ஆண்களிடமும், பெண்களிடமும் மறைந்தது.

கண்ணே இல்லாத ரதியின் வேகமான காமம் மட்டும்.. மிருக வர்க்கத்தின் மத்தியில் மறைந்தது. இதன் காரணமே... மிருக இனம் இன்று வரை உறவு வழி நிதானமின்றி ஆண் இனம் எல்லாப் பெண் இனத்துடனும் சேரும். ரதி, மன்மதன் எரியவில்லை என்று கட்சி பேசினாள். தேவர்கள் மன்மதன் எரிந்துவிட்டான் என்று கட்சி பேசினர். இப்பண்டிகை தென் ஆற்காடு, வடஆற்காடு பகுதிகளில் முன்பு வழக்கமாக நடக்கும.

தெருவின் மூலைகளில், ஓலைக் கொட்டகை, அதாவது பச்சை ஓலைக் கொட்டகையில் மன்மதனின் உருவப் படத்தை துணிகளில் எழுதி உள்ளே வைத்து... இரண்டு கட்சியினரும் பத்து நாட்களுக்கு விழா நடத்துவார்கள்.

ஒரு சாரார் காமன் எரிந்தான் என்ற வாதத்தைக் கொண்டவர்கள். மற்றொருவர் இல்லை என்கிற கட்சியைச் சேர்ந்தவர்கள். இல்லை என்பவர்கள் படத்தை ஊர்வலமாக எடுத்துச் செல்வர். காமன் எரிந்தான் என்பவர்கள்

தங்களின் ஓலைக் கொட்டகையை எரித்ததோடு நில்லாமல்..., எதிர்க்கட்சியினரின் படத்தையும் எரிப்பார்கள்.

இதில் பல சமயம், கைகலப்பும், சண்டைகளும் நிகழும். இப்படி ஒரு நிகழ்ச்சியும் சண்டையும் நெலம் என்ற ஊர் அருகே நடந்தது. அபபொழுது அவ்வழியாக ஞானி நெரூர் சதாசிவ பிரும்மம் ஆடையின்றி, பிரும்மத்தில் லயித்துச் சென்றுகொண்டிருந்தார்.

ஊர் ஏற்கெனவே ஞானிகளை நன்ருக அறிந்திருந்தது.

காமன் பண்டிகையில், எரிந்த கட்சியினரும், எரியாத கட்சியினரும், ஒருவருக்கு ஒருவர் மிக ஆவேசமான நிலையில் இருந்தனர்.

கூட்டத்தில் ஒருவன், அவர்களின் கோபத்தைத் தணிக்க சதாசிவ பிரும்மத்தினிடம் ஞாயம் கேட்கச் சொன்ஞன். சிவபெருமானின் முன் மன்மதனை, காமன் எரிந்தானு? இல்லையா? என்று எல்லோரும் ஞானிகளைக் கேட்டனர்.

பிரும்மேந்திரர் மௌனமானதால், விடையை மண் தரையில் எழுதிக் காட்டினர்:

...''சிவபெருமான் காமியே. அதனுல் அவன் பெயர் காமேஸ்வரனே சிவபெருமான் காமனை எரித்த ஞானியே. அதனுல் அவன் பெயர் ஞானமூர்த்தியே.

ஒரு நல்ல பிள்ளையைப் பெறும்வரை மன்மதனை எரிக்காதே, காமியாய் இரு. பூரண ஞானமுள்ள ஒரு ஞானப் பிள்ளையைப் பெற்ற பின், காமனை எரித்து விடு, காமியாய் இராதே.

சிவபெருமான் விநாயகனைப் பெற்றுன். சண்டிகேஸ்வரனைக் கொண்டான், வீரபத்திரனையும் பெற்றுன். காமேஸ்வரனுனுன். காமனை எரிக்கவில்லை, காமனை எரிக்கவில்லை.

ஞானப்பிள்ளையான ஆறுமுகனை ஞானப் பொறியாகப் பெற்ருர். காமனை எரித்தார், ஞானமூர்த்தியானுர். ஞானமூர்த்தியானுர்.''

கூட்டத்தினர் கலவரமடைந்து மன்மதன் எரிந்தானு இல்லையா? என்பதைத் தீர்மானமாககுங்கள் என்று கோஷமிட்டனர். ஞானி, காமன் எரிந்தான், எரியவில்லை, எரிந்தான் எரியவில்லை என்று மீண்டும் எழுதினுர்.

அந்தக் காமன் பண்டிகை கேளிக்கையில் ஒரு இஸ்லாமிய நண்பரும் இருந்தார்.

கோபம் கொண்ட அனைவரும் அந்த நண்பரைத் தூண்டினர்.

வெகுண்டு எழுந்த அந்த மனிதர், குழப்புகின்ற ஞானியே, குழப்பாதே என்று ஆவேசமுற்று கையிலிருந்த அரிவாளால் பிரும்மேந்திரரின் கையைத் துண்டித்து எறிந்தார்.

பிரும்மம், பிரும்மத்தில் லயித்தே நடந்தது. குற்றம் செய்தவன், பிறகே உணர்ந்தான். ஞானிகளின் கையுடன் அவரைச் சரணமடைய கை ஒன்று சேர்ந்தது. இஸ்லாமிய நண்பன் ஞானிகளின் ஆசியுடன் ஞானியாஞன். பிறகு சில நாட்களில், நெரூர் சதாசிவ பிரும்மம், நெரூர் காவிரிப் படுக்கையில்... ஜீவசமாதி அடைந்தார்.

அவரே, மீண்டும் ஜீவசமாதியிலிருந்து ஜீவனுடன் நம்முன் மீண்டும் பிருமம ஞானியாய் உலவிவருவது... உள்ளங்கை நெல்லிக்கனியே.

18-ஆம் நூற்ருண்டில் ஞானிகள் நெரூரில் ஜீவனுடன், ஜீவசமாதி ஆவதைக் கண்ட ஒரு முட்டாள் அவரின் அருளால் அவரின் கை வெட்டுண்ட உண்மைச் சம்பவத்தைத் தெரிந்து பல நாட்கள் வரை மக்களுக்கு மண்ணில் எழுதிக் காட்டிய வரிகள் மேலே சொன்னவை.

முக்காலும் உணர்ந்த ஞானிகள் எக்காலத்தில் பிறந்தாலும்... எக்காலத்தையும் இக்காலத்தில் எடுத்துரைப்பது ஞானம்.

அடியவன் நெரூர் சதாசிவ பிரும்மம் ஞானியாய் மீண்டும் வந்தேன். ஞானி ஏசு பிரான் நல்ல வெள்ளிக் கிழமையன்று மீண்டும் உயிர்த்தெழுந்தார். உயிர்த்தெழுந்த அடியேன் எனது அநுபவத்தை கதை சொல்லும் நிலையிலும், கதையின் பாத்திரமான அதே தன் நிலையிலும் கதையே நான் என்பதால் அநுபவமாகவே உங்கள் முன் ஒளிருகிறேன்.

ஓம்

சுபம்.

ஒரு நாள் அரசன் ஒரு நாள் பணக்காரன் என்று
நினைத்ததும் உடனே சந்தோஷப்படுகிருய்.
ஒரு நாள் நான் ஏழை என்று எண்ணவே பயப்படுகிருய்.
நான் ஒரு தொண்டன் என்று நினைத்து
தொண்டனுனதும் அளவிலா ஆனந்தம் கண்டேன்.



பெரிய அண்டா வாளி இவைகளுக்கு
வாய் காது இரண்டும் இருக்கும்
வாழ்விலே உயர்ந்த மனிதர்களுக்கெல்லாம்
உயர்விற்கு காரணம் புத்தியே
உயர்வாய் இருந்திருக்கும்
அதிர்ஷ்டத்தை நம்பி உயருவது என்பது
வாயில்லா அண்டா வாளியைத் தூக்குவதைப் போன்றது.



கெட்ட எண்ணம் மனிதனின் உள்ளத்தில்
அழுகி வருவதால் மனிதன் அழுகுவதில்லை கெடுகிருன்
எண்ணம் அழுக மனிதன் கெட இதுவே
கெடுவதன் இலக்கணம் தத்துவம் எல்லாம்



அனைவருக்கும் கல்வியைத் தந்துவிடு
ஒவ்வொருவரும் அழகுடன் கொலுவீற்றிருப்பார்கள்
அது இல்லாதவரை ஒருவரை ஒருவர் யார் அழகு?
என்று பார்க்கின்ற சமுதாயக் கொலுதான் நிரந்தரம்
உயர்விற்கு ஏங்காதே.



வாழ்வு பல அத்தியாயங்களைக் கொண்ட ஒரு முழு நாவல்
அல்லது குறு நாவல் அதில் ஏதாவது ஒரு அத்தியாயம்
கடவுள் என்ற சுகம். எனக்கு முதல் அத்தியாயமே
கடவுள். உனக்கு?



பலூனை ஊதாமல் அது வெடிக்கவே வெடிக்காது.
கடவுளை நினையாமல் உனது கஷ்டம் விலகவே விலகாது.
கடவுளை நினையாத உனது கஷ்டம் என்ற பலூன் கடவுளுக்கு
பலூன் என்றே தெரியாது.

